வெளியீடு எண்: 139

# ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் — நெஞ்சுவிடுதூது

(குறிப்புரையுடன்)



ாவடுதுறை ஆதீனம்

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

## ஜன்மநக்ஷத்திர விழாமலர்

விகாரி - பங்குனி - கஎ

30—3—1960

வெளியீடு எண் 139.

உ

சிவமயம்

திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான்

**திரிசிரபுரம் - மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்**

இயற்றிய

# ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது

**(குறிப்புரையுடன்)**

25
2-60

இஃது

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி

**வெளியிடப்பெற்றது.**

திருவாவடுதுறை ஆதீனம்

1960.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

சிவமயம்

# முகவுரை

"எம்மையாள் பொருட்டுக் கயிலையு மழுமான்
இலகிய திருக்கைசார் வடிவுஞ்
செம்மைசால் பெயரு நீத்துவே றடைந்தாய்
திகழ்தரு முன்னுள மூன்று
தம்மைநோக் குறினின் றுள்ளமூன் றனுக்குந்
தாழ்ந்தன வென்றுளந் தெளிந்தேன்
சும்மைநீர்த் தடங்கள் சூழ்பெருந் துறைசைச்
சுப்பிர மணியதே சிகனே."

தெய்வச் செந்தண்டமிழ் மொழிக்குரியனவாகக் கூறப்படும் தொண்ணூற்ருறுவகைப் பிரபந்தங்களிலே தூது என்னும் பிரபந்தமும் ஒன்ரும். இது, தலைவன் தலைவியர்களுள் ஒருவர் மற்ருெருவர்பால் தமது காமவருத்தத்தைத் தெரிவித்துத் தம் கருத்துக்கு உடம்பட்டமைக்கு அறிகுறியாக மாலையை வாங்கிவருமாறு தூதுக்குரிய பொருள்களுள் ஒன்றனைத் தூது விடுவதாகக் கலிவெண்பாவால் கல்வியில் வல்லுநரால் இயற்றப் படுவது. இதன் இலக்கணம், "பயில்தருங் கலிவெண் பாவி ஞலே, உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும், சந்தியின் விடுத்தல் முந்துறு தூதெனப், பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே" (இலக்கண விளக்கம், 874 சூத்) என்னும் சூத்திரத்தாலும், அதன் உரையாலும் உணரப்படும். அன்றியும், "எகினமயில் கிள்ளை எழிலியொடு பூவை, சகி குயில்நெஞ் சந்தென்றல் வண்டு - தொகைபத்தை, வேறுவே ருப்பிரித்து வித்தரித்து மாலைகொண்டன், பூறிவா வென்றல் தூது" (பிரபந்தத்திரட்டு) என்பதனுலும், "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை, பயம்பெறுமே கம்பூவை பாங்கி - நயந்தகுயில், பேதை நெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" (7) என்னும் இரத்தினச் சுருக்கச் செய்யுளினுலும் தெளிவாகப் புலனும்.

அஃறிணைப்பொருள்கள், ஒருவர் சொல்வனவற்றைத் தாம் கேட்டறிந்து தூதாகச் சென்று ஒருவரிடம் தெரிவித்து அவர் கூறும் விடையை அறிந்துவரும் அறிவுடையன அல்ல. எனினும்

தலைவன் தலைவிகளுடைய மனமயக்கமே அவற்றை விளித்துத் தூதாகப் போக்குதற்குக் காரணமாம். 'காம மிக்க கழிபடர் கிளவி' என்னும் அகத்திணைத் துறை இதன்பாற்பட்டதே என்பர். ''கேட்குந போலவும் கிளக்குந போலவும், இயங்குந போலவும் இயற்றுந போலவும், அஃறிணை மருங்கினும் அறையப் படுமே'' (நன்னூல் - 409 - சூத்) என்னும் சூத்திரம் இது போன்ற நிகழ்ச்சிகளை நோக்கியே எழுந்ததுபோலும் என்பர் பெரியோர். வடமொழியிலே மேகஸந்தேசம், ஹம்ஸஸந்தேசம் என்னும் தூதுநூல்கள் உள. ஸந்தேசம் - தூது. தமிழிலே திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்காரால் இயற்றப்பட்ட 'திருநறையூர் நம்பி மேகவிடுதூது' என்றொருநூல் உண்டு. இந்தத் திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான், கவிராக்ஷஸ ஸ்ரீ கச்சியப்பமுனிவர் அருளிச்செய்த கச்சி ஆனந்த ருத்திரேசர் **வண்டுவிடு தூதும்**, பலபட்டடைச் சொக்கநாதபிள்ளை இயற்றிய ஸ்ரீ பத்மகிரிநாதர் **தென்றல்விடுதூது**, அழகர் கிள்ளைவிடு தூதுகளும், தருமையாதீனத்து ஸ்ரீ அழகிய திருச்சிற்றம்பலதேசிக மூர்த்திகள்மீது அழகிய திருச்சிற்றம்பல சுவாமிகள் இயற்றியருளிய **கிளிவிடுதூதும்** தூதுக்குரிய பொருள்களுள் வண்டு, தென்றல், கிள்ளை முதலியவற்றைத் தூதாக விடுத்தமைக்கு எடுத்துக்காட்டாகவுள்ள இலக்கிய நூல்களாம். இரத்தினச் சுருக்கம் முதலியவற்றுள் கூறப்படாததாகவுள்ள சிலவற்றைத் தூதுவிட்டதாகப் பாடிய பிரபந்தங்களும் உள்ளன. அவை புகையிலை விடுதூது, தமிழ் விடுதூது முதலியன. தமிழைத் தூதாக விடுத்தலும் மரபு என்பதை ஸ்ரீ கச்சியப்ப முனிவர் தாமருளிய வண்டுவிடு தூதிலே குறிப்பிட்டிருக்கின்றனர்.

இனி, ஸ்ரீ மெய்கண்டதேவநாயனருக்குப்பின் புறச்சந்தானத்து நான்காவது குரவராக எழுந்தருளிய ஸ்ரீ உமாபதிதேவ நாயனூர் அருளிச்செய்த **நெஞ்சுவிடுதூது** என்னும் பிரபந்தம் ஒன்றுண்டு. அது தமது ஞானகுரவராகிய ஸ்ரீ மறைஞான சம்பந்தநாயனுர்பால் தம்நெஞ்சைத் தூதாக விடுத்தருள்வது. ஆசிரியர்பாலும், உபகாரிகளிடத்தும், கடவுளரிடத்தும் தூது போக்குதல் மரபு ஆகும். கடவுளிடத்துத் தூதுபோக்குதல் புறத்திணைத் துறைகளுள், கடவுள்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கத்தின் பாற்படும்.

தேவாரம் முதலிய திருமுறைகளிலும், திவ்வியப்பிரபந்தம் முதலியவற்றிலும் தூதின் வகைகள் ஆங்காங்கே அமைந்து விளங்குவன. கலம்பகம், அந்தாதி முதலியவற்றில் இடையிடையே தூதுகள் அமைக்கப்பட்டுள.

இவை, இயற்றிய ஆசிரியர்களுடைய அறிவு ஆற்றல்களைப் புலப்படுத்துவன; பாட்டுடைத்தலைவர்களின் வரலாறுகளைத் தெரிவிப்பன; தூதிற்கு உரிய பொருள்களின் பெருமையைப் பலவாருகப் பாராட்டுவன; தமிழ்மொழிப் பயிற்சியுடையவர்கள் மனத்தை வேறென்றிலும் செலுத்தாதபடி, சொல்லணி பொருளணிகளால் கவர்ந்து தமிழ்ச்சுவையை எளிதில் சுவைத்து இன்புறச் செய்வனவாம். பொதுவாகக் கூறுமிடத்துக் கவிஞர்கள் தம்முடைய கவித்திறத்தைக் காட்டுவதற்கு நிலைக்களனாக அமைத்துக்கொண்ட அமைப்புடைய இலக்கியமேயன்றி இஃது இயல்பாக நிகழத்தக்கதன்று என்க.

இனி, 'ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது' என்பது தமது ஞானசாரியர்பால் நெஞ்சைத் தூதாக விடுத்தமையை விளக்குவதாகும். இத்தூதுப்பிரபந்தத்தை இயற்றியவர்கள் இவ்வாதீனத்து மகாவித்துவாஞக விளங்கிய திரிசிரபுரம்—ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள். நூலாசிரியர் பெயரைக் கூறவே இப்பிரபந்தத்தின் சிறப்பு, குன்றிலிட்டதீபமென விளங்கும்.

இந்நூலிலுள்ள கண்ணிகள் 311; காப்புச்செய்யுள் நேரிசை வெண்பா 1.

இந்நூலுள் 4-ஆவது கண்ணி முதலியவற்றில் சிவபெருமான் சகலவர்க்கத்தாராகிய ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்யுமாறு கொன்றை திங்கள் சடை முதலியவற்றை மறைத்துத் திருவாவடுதுறையிலே குருமூர்த்தியாகத் தோன்றியருளினுர் என்றுர்.

8—ஆவது கண்ணிமுதல் அடிமடக்காக 'ஒருமான் எமக்கொளிக்க ஒருமானெளித்த ஒருவன், மதிமறைத்த மாசெமக்கு மாற்றியருள மதிமறைத்த மாசடையாவள்ளல், இருள்கண்டயாம் அவ்விருள் காணுவண்ணம் இருள் கண்டம் காட்டாதிருப்போன், மானிடனே என்ன மருவியிருந்தாலும் மானிடனே என்ன வயங்குவான்' எனச் சிலேடைவகையில் அமைத்தார்.

12—13 கண்ணிகளில் உலகாயதர், பௌத்தர், அருகர், மாயாவாதிகள் முதலிய பரசமயிகளும் உச்சிமேல் கைகூப்பி மனமுருகிநின்று வணங்குவார் என்றுர்.

கண்ணி 14-ல் வேலரசர்கள் தன்னடிவைகத் தான் ஓர் அரசின் அடியின்கண் வைகியருளினன் என்றுர்.

15–19: கயிலாயபரம்பரை நந்திமரபு மெய்கண்டசந்தானம் குறிக்கப்பட்டது.

20–21: (ஆசிரியனை) பாட்டுடைத்தலைவரைப் பரிதி அமுதம் என உருவகித்தார்: பரிதி புறவிருளை நீக்குவது இயல்பு, இஃது அகவிருளை நீக்க எங்கள்பால் அமர்ந்தது எனவும்; ஆலகாலவிடம் தோன்றியபின் கடலில் தோன்றியது தேவ ரமுது, இவ்வமுதம் ஆலங்கலவாதது எனவும் குறித்த நயம் பாராட்டற்பாலது.

24: ஒன்று என்பதனை ஆணவமலம் ஒன்று என்றும், சிவ சத்தி பதித்தல் என்றும், அத்துவிதமாய்க்கலந்து ஒன்றுதல் என்றும் பொருள்படச்செய்தார்.

25: இறைமைக்குணங்களுள் 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' என்பது பேசப்பட்டது.

26: பஞ்சேந்திரியங்களால் பற்றப்பட்டுத் துன்புறும் ஆன்மாவைப் புழுவால் அரிக்கப்படும் பயிருக்கு உவமிக்கப் பட்டது.

30–34: இராவணன் திருக்கயிலைமலையை அசைத்தமை, இறைவன் மேருமலையை வளைத்தமை, தேவாசுரர் மந்தர மலையை மத்தாகக்கொண்டு பாற்கடல் கடைந்தமை, இந்திரன் வச்சிராயுதத்தால் மலைகளின் சிறகுகளை ஒருகாலத்தில் அரிந் தமை, மைந்நாகமலை இந்திரனுக்குப் பயந்து கடலிடை ஒளித் துக் கொண்டமை, அகத்தியமுனிவர் விந்தியமலையைப் பூமியில் அழுத்தியமை ஆகிய புராணச்செய்திகள் கூறப்பட்டுள.

34–63: தசாங்கங்கள்: அறிவு, காமம், மாயை, உளம், கண் இவைகள் குறிஞ்சி முதலிய நிலங்களாக உருவகம் செய்து கூறப்பட்டுள. புறப்பொருட் செய்திகளில் பசுக்கவர்தல், முற்றுகை செய்தல்கள் குறிக்கப்பட்டுள்ளன.

41–79: மூவகை உயிர்கள், முப்பகுதியான மாயைகள், முப்பத்தாறு தத்துவங்கள், வேதாரணியம், வேதகிரி, நால் வகைச் சொற்கள், சித்தாந்த சைவம் (60, 117), பிரமன் முதலிய ஐவரும் சிவபெருமான் ஆணையால் ஐந்தொழில் இயற் றல், தை அசுபதிநாள், அடியார்களோடு கலந்திருந்து திரு வமுது கொள்ளல், பிற்பகலில் சாத்திரநூலை விரித்துணர்த்து தல், வட்டகைவிபூதியிட்டுக்கொள்ளல், உருத்திராக்க வடம் அணிதல், இருபாலும் தம்பிரான் இருவர் கைகொடுத்து வரல்,

பாதுகையில் இவர்ந்து செல்லல் முதலிய ஆதீன சம்பிரதாயங்களும் கூறப்படுதல் காண்க.

74–77: திருவெண்ணீறு, உருத்திராக்கமணிதல் முதலிய செயல்களை,

" ஆருஞ் சென்னியில் அஞ்சுகொத் தாகிய
அக்க மாலையும் நெற்றியின் மேலொளி
சேரும் வெண்பொடிப் பூச்சும் கருணையே
செய்யும் பார்வையும் வெண்ணகை யுங்குழை
யூருங் குண்டல மும்மணி மாலைதாழ்
உரமுங் கையிற் செபவடம் தாங்கிய
சீருங் கண்டுகண் பேறடைந் தேன் "

எனக் கலம்பகம் 74-ஆம் செய்யுளிற் கூறியமை காண்க.

80: முரசு, முழவம், முருடு, திமிலை, தடாரி, படகம் முதலிய வாத்தியங்களும்;

87: திருச்சின்னம், ஆலவட்டம், தாலவட்டம், கவிகை, சாமரை, வளைதடி, மகரதோரணம், ஒலியல் முதலிய எடுபிடிகளும்;

94–105: தேவார ஓதுவார்கள் தாளம் ஒற்றிக்கொண்டு பாடிவரச் சிவிகையிலிவர்தல், அரனடித்தொண்டர் நிலைகள் முதலியவைகளும்;

121: சாருவாகன், பாஞ்சராத்திரிகள், உலகாயதன் முதலிய மதவாதிகளும்; பிரமன், மால், மன்மதன், இயமன் முதலிய தேவர்களும்; அரிவாட்டாயர் (141) இயற்பகையார் (150) கண்ணப்பர் (151) சிறுத்தொண்டர் (160) முதலிய நாயனாரின் அருஞ்செயல்களும்; புரத்தைச் சிரித்தெரித்தல், பொன்னனையாள் நகக்குறியைக் கபோலத்திற்பெறல், மான் ஒலி, ஐவண்ணவடிவு, எலும்பு அணி, சின்முத்திரைக்கை, மார்பிற் சுவடு, தோலாடை கல்லாடைகள், கூற்றையுதைத்தல், இராவணன் இற விரலூன்றல் முதலியசெய்திகளும் கூறப்பட்டுள்ளன.

128–134: பாட்டுடைத்தலைவர் நெற்றிக்கண் நீத்தமை, தலைமாலை நீத்தமை, மதி மறைத்தமை, கொன்றைமாலையணியாமை, மான் ஏந்தாமை, அடி நிலத்தில்தோய்தல் முதலியவற்றிற்குத் தக்ககாரணங்காட்டிப் பாராட்டிக் கூறியுள்ளார்.

கயிலைமலை முதலியன மறைத்து வந்தமை முதலிய செய்திகள் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் மும்மணிக்கோவையிற் குறிக்கப்பட்டவை இங்கு ஒப்புநோக்கத்தக்கன. இனி,

"அகன்புனல் வாவிசூழ் ஆவடு துறையின்
மதியமும் அரவும் மலர்சடை முடியும்
கதிர்மழு மானும் கண்ணுதல் விழியும்
திருமுகம் ஐந்தும் சேரவே (கரந்து)
ஒருமுகம் இருவிழி ஓங்கிய இணைக்கை
அக்க வடங்கொண் டருளுருக் கொண்டு
பக்குவர்க் கநுக்ரகம் பண்ணுதல் நிமித்தம்
திருச்சிற் றம்பல தேசிக நாமம்
தரிச்சுத் தொண்டர் தம்பவம் மாற்றி
மானைக் காட்டி மானைப் பிடிக்கும்
கான வேடரிற் கலந்தனன் சிவனே"

எனத் திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகத்தில் அவ்வாசிரியர் குறித்தமையும் ஒப்பிடற்குரியன.

பிரமதேவரும் இயமனும் தத்தமது தொழிலை இழந்தனர் என்னும் செய்தியை,

"ஏடவிழும் போத னிருங்கை நமன்கால்கள்
சேடன் முடிகள் சிவப்பாறும் -"

என அக்கலம்பகமுடையார் காட்டினர்.

136: இக்கண்ணியில் 'அரைசூழ் தோகை இடப்பாலன் எனச் சொல்லும்' என்பதற்கு அரையிலே சுற்றியுள்ள கல்லாடையின் கொய்சகம் இடப்பாகத்திலே பொருந்தியுள்ளான் என்பது பொருளாகக்கொள்க. தோகை - கொய்சகம்; அஃதாவது முன்தானையின் நுனி. திருவாவடுதுறை ஆதீனத்திலே உள்ள மகாசந்நிதானமும், தம்பிரான் சுவாமிகளும் இடதுபக்கத்தில் முன்தானையைச் செருகித் தொங்கவிடுதல் சம்பிரதாயம் ஆகலின் அதனை இங்கே சுட்டிக் காட்டினர்.

"ஓங்குபுக ழிராமசா மிச்சுகுண மறையவன்பாட் டுவந்தான் **வாமந் தாங்குகற்றூ** கையுமருட்சுப் பிரமணிய குருவெனுஞ்சேய் தானு மேவ, வீங்குதுறை சையினுளு மெய்கண்டான் சந்தானம் விளங்க மேயோன், பாங்குபுனை பேரருளம்

பலவாண தேசிகனெம் பரமன் ருனே'' என்பது பெரியபுராணக் கீர்த்தனத்திற்குப் பிள்ளையவர்கள்தந்த சிறப்புப்பாயிரப் பாடல் களில் ஒன்று. வாமம் தாங்கு கல் தோகை - இடப்பக்கத்தில் நாலவிட்ட காவியுடையின் தலைப்பு என்பது ஐயரவர்கள் குறிப்பு. பிள்ளையவர்கள் சரித்திரம் - பக்கம் 303 பார்க்க.

*170–177:* மனமே எச்செயலுக்கும் காரணம் எனல்.

*179–241:* நெஞ்சமே! நின்னாலன்றோ அருஞ் செயல்களை யெல்லாம் திருத்தொண்டர்கள் ஆற்றிப் பேறுபெற்றனர் எனக் கூறுவாராய் அறுபத்துமூன்று நாயன்மார்கள் வரலாறு சுருக்கிச் சொல்லப்பெற்றன. இதனால் நாயன்மார்களிடத்து இந்நூலா சிரியருக்குள்ள பத்தி மிகப் புலனும். அன்றியும், இவர் இயற்றி யுள்ள சேக்கிழார்சுவாமிகள் பிள்ளைத்தமிழிலே பண்டை யாசிரியர் கொண்டமுறையை மாற்றி, காப்புப்பருவத்தில், திருத்தொண்டத்தொகை பதினொரு பாடலிற் கூறப்படும் நாயன்மாரையே காப்பாக வகுத்துக் கூறினர்.

இனி, அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழிலே காப்புப் பருவம் கூறத் தொடங்கித் திருநந்திதேவர், சனற்குமார முனிவர், சத்தியஞானதரிசனிகள், பரஞ்சோதிமுனிவர், மெய் கண்ட சிவாசாரியார், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார், அருணமச்சி வாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமச்சிவாயமூர்த்திகள் முதலிய பதினல்வர் காக்க எனக் கூறினர். இதனாலும் இந்நூலாசிரியர் நாயன்மார்களையன்றி மெய்கண்டசந்தான ஆசிரியரிடம் வைத் துள்ள பத்திப் பெருமைக்கு அளவின்றென்பது தெற்றெனப் புலப்படும். இவ்வாசிரியர் இயற்றிய திருவிடைமருதூருலாவில் 230–235 கண்ணிகள் திருவாவடுதுறைத் தேசிக சிகாமணி யாகிய சுப்பிரமணியதேசிகரைப் பாராட்டுவன. நாயன்மார் அறுபத்துமூவரையும் ஏற்ற ஏற்ற இடங்களில் அந்நூலின்கண் அமைத்துப் பாராட்டியமையும் கருதத்தக்கது.

*244–251:* அன்னம், மயில், கிளி, முகில், பூவை, தோழி, குயில், தென்றல் முதலியன தூதாகச்செல்லும் திறத்தன அல்ல என்பதற்குரிய காரணங்காட்டி விலக்குவர்.

இவ்வாதீனத்துக் கவிராக்ஷஸ ஸ்ரீ கச்சியப்பமுனிவர் தாம் இயற்றியருளிய வண்டுவிடுதூதில் நெஞ்சம் தூதுப்பொருளா யினும் தகுதியுடையதன்று எனக்கற்பித்தார். அது வருமாறு: 'நெஞ்சத்தைத் தூதுவிட நினைத்தால், அவர் திருவுலாக்

கொண்டருளுகின்ற காலத்தில் அது முன்னமே அவருடைய பேரழகில் ஈடுபட்டு உடன்சென்றது; இன்னும் வரவில்லை; வரினும் மீண்டும் செல்லுதற்கு மயங்கும்; போகவிரும்பினும் புலன்களாற் பற்றப்படும்; அங்கே சென்றாலும் மேற்கொண்ட காரியத்தை மறத்தலும் கூடும்; ஆகலின் தூதுக்குத் தக்கதன்றென்றார். இவ்வாசிரியர் தக்கது எனக் காரணங்காட்டிக் கற்பித்தல் கற்பனைத் திறத்தைக் கருதச்செய்யும்.

இனி, புறச்சந்தானகுரவரில் நான்காமவராகிய ஸ்ரீ உமாபதி தேவநாயனார், தாம் அருளிய நெஞ்சுவிடுதூதில் 'உன்னை ஒழிய உறவில்லை என்னும் அது தன்னை அறிவை' (கண்ணி – 23) எனக் கூறித்தேற்றி ஆசாரியன்பால் தூதாக அனுப்புவார்கள். அந்நூல் 108–119 கண்ணிகள், இந்நெஞ்சுவிடுதூதினுள் இவ்வாசிரியர் அமைத்திருக்கும் 266–275 கண்ணிகளை விளக்கமாக உணர்த்துவனவற்றையும் அந்நூலுக்கு இவ்வாதீனத்து ஸ்ரீ நமச்சிவாயத்தம்பிரான் எழுதியுள்ள உரையையும் நோக்கி அறியக்கிடப்பனவாம்.

மனத்தை அணுவெனல் நியாயநூலார் கூற்று. (கண்-271) இதனை, "காந்தம் வலியும் இரும்புபோற் கண்கள்தன்னோடுறப் பிணித்து, நேர்ந்த மனமோர் அணுவென்னல் நியாயமன்றென்று" (பிரபுலிங்க - மாயையினுற் - 45) என்பதனாலும்; "கொட்புற உலவுந்தோறும் குரத்தடை துகளின் குப்பை, நுட்பமார் அணுக்களென்னும் நுவலரும் மனத்தின் கூட்டம்" (நைடதம் – அன்னத்தைக் கண்ணுற்ற - செய் 21) என்பதனாலும் அறியலாம். இவ்வாசிரியர் இயற்றிய,

'திறப்பா வனைய மனமோ ரணுத்துணை செப்பலென்ன
மறப்பா வனைய மனமிலை யோவிடை மாமருதுஞ்
சிறப்பா வனைய மருதருந் தேவியுந் தேவிடையும்
அறப்பா வனையக் கொடுவைக வென்னு ளடக்கியதே.'

என்ற திருவிடைமருதூர்த் திரிபந்தாதிச் செய்யுளும்,

'மனமணுத் துணையே யென்று நியாயநூல் வகுக்கு மேனும்
அனகமெய்த் தவத்தா ராய வறுபத்து மூவ ராவார்
கனசரித் திரம னைத்துங் கவர்ந்துதற் குள்ள டக்கும்
வினவுறீ ரெவ்வா றென்று விடைவித்தி னாலே போலும்.'

என்ற திருவரன்குளப்புராணச்செய்யுளும் எண்ணுதற்குரியன. இதற்குவிதி, "இன்பம் முதலிய பண்புறத் தரூஉம், கருவியாம்

பொறி மனமஃ துயிர்தோ, றின்றி யமையாது வேண்டலிற் பலவாய், அணுவாய் நிற்கும் என்மனூர் புலவர்'' என்பது.

*254—264 :* ஸ்ரீகண்ட உருத்திரர் முதலாக வரும் ஆசாரிய பரம்பரை 16-வது ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மூர்த்திகள் வரை இந்நூலுள் கூறப்பட்டன.

*266—275* வரை உள்ளன இன்னின்னவரைச் சேராதே என்று நெஞ்சுக்கு அறிவுறுக்கும் பகுதியாம்.

*276—292 :* திருவாவடுதுறையை அடைந்து வலமாகவந்து தென்முகப்பைச் சார்தல், கொலுமண்டபத்தைச் சேறல், அங்குள்ள தம்பிரான்களையும் அவர்பக்கல் உள்ளாரையும் போற்றுதல், தலங்காறுபாறு சுவாமிகளைக்கண்டு வணங்கல், அதன்பின் ஸ்ரீ திருமாளிகைத்தேவரைத் தரிசித்தல், ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகள் சந்நிதியில் தரிசித்து வணங்குதல், இரண்டாம் ஒடுக்கத்திலே வீற்றிருக்கும் சின்னப்பட்டத்துத் தேசிகரைத் தரிசித்துவணங்குதல், ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியர் கோயிலை வலம் வரல், பூசையைத் தரிசித்தல், மாகேசுரபூசையில் கலந்துண்ணல், ஒடுக்கவாயிலை மெல்லென அடைதல், அங்குள்ள சாந்தகுணமுடையாரைச் சந்தித்துச் சமயம் வினவி அறிதல், ஸ்ரீ தேசிகசுவாமிகளைத் தரிசித்துத் திருநீறு பெற்றுக்கொள்ளுதல் முதலியன அடைவே கூறப்பட்டுள.

*293—301:* ஸ்ரீ தேசிகமூர்த்திகள்பால் விண்ணப்பம் செய்தற்கு உரிய காலத்தையும், விண்ணப்பித்தற்கு உரியதல்லாத காலத்தையும் நெஞ்சுக்கு விளக்கமாக அறிவுறுத்தும் பகுதி ஒவ்வொரு அன்பர்நெஞ்சினும் பசுமரத்தாணிபோல் பதியத்தக்கதாம். விண்ணப்பம் செய்துகொள்ளற்கு உரியதல்லாத காலம் இவையிவையென உணர்த்தத்தொடங்கி; ஒடுக்கத்திலே விபூதி அருளுங்காலம், புலவர்கள் கவிபாடுங்காலம், இராயசம் காகிதம் வாசித்து நிற்குங்காலம், அடியார்களுக்குச் சாத்திர தோத்திரங்களுக்குப் பொருள் விளங்க உணர்த்துங்காலம், அரசர்கள் பிரபுக்கள்வந்து தரிசித்து நிற்குங்காலம், பிராமணர்கள் தங்குறைகூறி யாசித்துப் பொருள்பெறுங்காலம், சிதம்பரம் முதலிய தலங்களினின்று வந்தோரிடத்து நித்திய நைமித்திக வழிபாட்டுக்குரிய நிலைகளை விசாரித்திருக்குங்காலம், வந்து தரிசிக்கும் மாணவச்சிறுரைப் பாடங்கேட்டு மகிழுங்காலம், ஓதுவார்கள் ஆனந்தக்களிப்புக்கூறி ஏத்துங்காலம், இத்தகைய காலங்களில் ஒன்றும் அறிவிக்கலாகாது என்னும் புத்திமதி

எத்துணை உபகாரமுடையதாம். இந்தக் காலங்களில் குறுக்கிட்டுச் செய்யும் விண்ணப்பத்தால் சிறிதும் பயனில்லை என்பது குறிப்பு. அம்மட்டில் அமையாமல் விண்ணப்பிக்கும் காலமும் மேலே குறிப்பிட்டுள்ளார். சயனிக்குமிடத்தைச் சார்ந்து விண்ணப்பித்தலே தகுதி என்பர். அங்கே சென்று தலையாரக் கும்பிட்டு, *303-310:* ஆசாரியனைப் போற்றி, அருளுண்டாமாறு பேசி, பின்பு பிரிவை உணர்த்தி, அவர் அணிந்துள்ள 'செங்கழுநீர் மாலையை வாங்கிவா' 'விரைந்துவா' எனக் கூறி முடிக்கின்றார் இவர்.

கவிசார்வ பௌமராகிய துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த ஸ்ரீ சிவஞானபாலைய தேசிகர் நெஞ்சு விடுதூதினுள் அமைந்துகிடக்கும் சொல்லையும் பொருளையும் இந்தநூலுள் எடுத்தாண்டிருப்பதனை நோக்கும்பொழுது இந்த நூலாசிரியர் 'கற்பனைக்கு ஊற்று' என யாவராலும் பாராட்டப்படும் சிவப்பிரகாசசுவாமிகள் நூல்களிலே எத்தனை ஈடுபாடு உடையவர்கள் என்பது விளங்காமற் போகாது. கவிராக்ஷஸ - ஸ்ரீ கச்சியப்பமுனிவரைத் தமது உபாசனா மூர்த்தமாகவே கொண்டொழுகிய பிள்ளையவர்கள் முன்னோர்கள் செய்துள்ள நூல்களுள் காணப்படும் அருஞ் செய்திகளையும் கற்பனைகளையும் எடுத்துத் தமது நூல்களிலே குழைத்து மெருகிட்டு இனிதமைத்து யாவரையும் சுவைக்கச்செய்வர்.

இனி, இவ்வாசிரியர் நால்வகைக் கவிகளுள் வித்தாரகவியாகலின் பெருங்காப்பிய இலக்கணங்கள் யாவும் செறியப் புராணங்கள் பல இயற்றியுள்ளனர்; பிள்ளைத்தமிழ், கலம்பகம், அந்தாதி முதலிய பிரபந்தங்களும் பலப்பல இயற்றித் தமிழ் கற்பாருக்குப் பெருவிருந்தாகச் செந்தமிழமுதை இனிது ஊட்டி மகிழ்வித்தனர்; உலாப்பிரபந்தமும் இயற்றினர். நெஞ்சுவிடு தூது என்னும் இப்பிரபந்தத்தையும் சுப்பிரமணியதேசிகர் மாலை என்னும் சிறுநூலையும் தமது ஞானசாரியர் திருவடிகளில் சாத்தி மகிழ்ந்தனர். அன்றியும், பதினைந்தாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாணதேசிக மூர்த்திகள் திருவடிகளில் கலம்பகம், பிள்ளைத்தமிழ் என்னும் இருநூல்களை அணிவித்தனர். இவைகளெல்லாம் ஆதீன சம்பிரதாயங்களை நன்கு அறிவிப்பனவாம்.

இத்தகைய சிறந்த நூல்களுள் ஒன்றாகிய 'நெஞ்சுவிடுதூது' இப்பொழுது இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானமாக வீற்றிருந்தருளிச் செந்தமிழ் நூல்களையும் சித்தாந்த சைவ

நூல்களையும் சிறந்த முறையிலே வெளியிடச் செய்து, சித்தாந்த மாநாடு, திருமந்திர மாநாடு முதலிய மாநாடுகளை ஆண்டு தோறும் கூட்டிச் சைவசித்தாந்த சமய நலங்களை மக்களுக்கு ஊட்டிப் பயன்படுத்தி மகிழும் ஸ்ரீ-ல-**ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்** ஜென்மநட்சத்திர விழாமலராகக் குறிப்புரையுடன் வெளிவருகிறது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் கட்டளையிட்டருளியபடி இப்பதிப்பிலே மூலபாடத்தின்கீழ் கண்ணிகளின் எண்கள் குறிக்கப்பட்டுக் குறிப்புரையும், ஆராய்ச்சி முகவுரையும், நூலின் பொருட்சுருக்கவசனமும் புதிதாக அடியேனால் எழுதிச்சேர்க்கப் பட்டுள. குற்றமுளதாயின் அறிஞருலகம் பொறுத்தருள வேண்டுகின்றேன்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் நீடுவாழ்க.

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,**

ஆதீனவித்துவான்.

திருவாவடுதுறை
19—3—1960

# நூலின் பொருட்சுருக்கம்

பிரமதேவரும் திருமாலும் பிரணவத்துக்கு உரிய பொருளாகிய சிவபெருமானை அடைதற்கு, சிவஞானத்தை விளைவித்தற்கு ஏதுவாகிய இடம் கர்மபூமியே என்று துணிந்தனர். ஆயினும், அவர்கள் வேதங்களால் விளங்கக் கூறப்படும் திருநீற்றையும் திருவைந்தெழுத்தையும் சாதனமாகக்கொண்டிலர். அகந்தையால் அடிமுடியைக் காணுமவரே பிரமப்பொருள் என மாறுபட்ட சிந்தையுடையராயினர். பிரமன் அன்னப்பறவையுருக்கொண்டு திருமுடியைக் காணப் பறந்துசென்ருர். திருமால் பன்றியுருக்கொண்டு திருவடியைக்காண்பேன் எனப் பூமியைக் கிளறிச் சென்ருர். இவ்வாறு படைப்புக்கடவுளும் காத்தற்கடவுளும் செருக்கால் இழிந்த பறவையாயும் விலங்காயும் தேடிச்சென்றும் இறைவன் இன்னுங்காணுத இயல்பினர் ஆவர்.

அத்தகைய பெருமையையுடைய சிவபெருமான், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகைப்பட்ட ஆன்மவர்க்கத்தினருள் சகலவர்க்கத்தினரை ஆட்கொள்ளும்பொருட்டாகத் தமது திருவருட்பெருக்கால் கொன்றைமாலை, பிறைச்சந்திரன், சடை முதலியவற்றையெல்லாம் மறைத்து, திருவாவடுதுறைசெய்த தவப்பயனுல் தோன்றியருளினர். அறிவை மறைத்த ஆணவமல வலிகெடப் பிறையைமறைத்த பெருமான். தூல உடம்பு கெடுமாறு மூலப்பகுதி தொலைய மான்பொருந்திய கரத்தை மறைத்துவந்த வள்ளல். நமக்கு உரிய வைப்பாகக் கொண்ட ஆணவமலவிருளைக் காணுவண்ணம் இருண்ட நஞ்சக் கறையை மறைத்தருளிய பெருமான். உமாதேவியாரை ஒருகூருகக் கொண்டருளும் மகாதேவனுயினும் மனிதவடிவத்தைக் கொண்டு வயங்கும் தன்மையன். உலகபோகமே முத்தியெனக் கொண்டொழுகும் உலகாயதர், அருகர், புத்தர், நாமே பிரமமெனும் மாயாவாதிகள் என்னும் புறச்சமயிகளும் தூரத்தே கண்டாலும் இருகரங்களையும் எடுத்து உச்சிமேற் குவித்து நெக்கு நெக்குருகி நின்று வணங்கும் பெருஞ் சிறப்பினின்று நீங்காதவன். அரசர்களும் தன்னடியில் வந்து வணங்கத் தான் ஒரு அரசமரத்தின் நிழலில் தங்குபவன். அடியார்களெல்லாம் நமக்குரிய தானம் கயிலைமலையே என்று சொல்லும்படி

கயிலாய பரம்பரையில் திருநந்திமரபிலே மெய்கண்டசந்தானம் உயர்ந்து விளங்கித் தழைக்குமாறுள்ளான். அகவிருளாகிய அஞ்ஞானத்தையகற்ற எங்கள்பால் வந்தமரும் ஞானசூரியன். முன்பு பாற்கடலில் தோன்றிய அமுதம் ஆலகாலவிடம் தோற்றிய பின்பு தோற்றியதென்பர். இவ்வமுதம் ஆலம் கலவாத அமுதமாம். (ஆல் அங்கு அலவாத - கல்லாலின்கீழ் அகலாத என்றபடி: எனவே, கல்லாலின் கீழிருந்தகடவுளே இக்குருவடிவமாம் என்பதாயிற்று.) மறந்து மறந்து நினைக்கும் இயல்பினையுடைய ஆன்மாக்களாகிய எங்கள் பிறப்பு நீங்கும்படி தோன்றிய பெம்மான். அடைந்தோர்களுக்குப் பொன்னைக் கொடுத்துப் போக என்னுமல் தன்னையே கொடுத்தருளும் உயிர்த்தலைவன். (தம்பிரான் - தமக்குத்தாமே பிரானுக உள்ளார்.) ஆன்மாவை முன்பு கேவலநிலையில் அழுந்திக் கிடக்கச்செய்தது ஆணவமலம் ஒன்றே என்று அதனை வலியொழியச்செய்து, வறுத்த வித்தாக்கி, சகலநிலையையும் ஒழித்து, சுத்தநிலையாகிய ஒன்றைக் கொடுத்துபகரித்த அத்துவிதமாய்க் கலந்துநிற்கும் ஒப்பற்றவன். பொதுநீக்கித் தனைநினையக் கற்ருராகிய அடியார்செய்யும் பிழையையும், இறைவனென்றுகைகுவித்துவணங்காதாருடைய அக்குணத்தையும் அறவே மறப்பான்: எனவே வேண்டுதல் வேண்டாமையிலான் என்றபடி. தேவர்களுடைய பெருமையையும் மக்களுடைய சிறுமையையும் எண்ணிப் பற்ருகக்கொண்டு அவர்பால் மனம் தோயாமையைத் திருவுளம்பற்றி மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல எங்கள்போலவே மனிதவடிவந் தாங்கிவந்த பெரியோன். புழு பூச்சிகளால் அரிப்புண்டு நாசமாகும் பயிர்களைப்போலப் பஞ்சேந்திரியங்களால் உண்டாகும் விஷய சுகங்களால் அரிக்கப்பட்டு அவதியுருமல் எங்களுக்கு ஒப்பற்ற பற்றுக்கோடாகவுள்ளான். நாதத்துவங்கடந்தமுத்தியைத் தரும் சிவஞானத்தையே பொழுதுபோக்காகக் கொண்டொழுகுபவன். வேதாந்தத்தின் தெளிவாம் சைவ சித்தாந்தத்தையே பெரும் பேருகவுடையான். அடையக்கடவதாகிய ஒன்றையும் விரும்பாதவன். யாவரும் பற்றக்கூடிய எளிய நிலையில் மனிதவுருக்கொண்டோன். ஆயினும், அறிவில்லாதாரும் சிவன் இவனே என்று தெளியுமாறு விளங்குபவன்.

வலிய இராவணனுல் எடுத்து அசைக்கப்படாத் இயல்பினதாய், புரத்தைப் பொடிபடுத்துமாறு எடுத்து வளைக்கப்படாததாய், ஆழியிலே வைத்துக் கடையப்படாததாய், சிறகு அரியப்

படாததாய், அகத்தியமுனிவர் கையிலகப்பட்டு அஞ்சாததாய், அருவிகளால் என்றும் நிறைந்த வளப்பமுடையதாய் உள்ள பெருங்கருணைமலையை உடையவன். ஆனந்தமே வற்றாதநதியாக உடையான். மாயை என்னும் நாட்டையுடையான். அன்பர் மனத்தையே நகராகவுடையான். வேதக்குதிரையையும், ஞான யானையையும் உடையவன். வாட்டமில்லாத பாமாலையையும், காவித்துவசத்தையும், நாதமுரசையும், ஐந்தொழிலை ஆற்று விக்கும் ஆணையினையும் உடையான். அத்தகைய ஞானமணி யாக விளங்கும் குருமணியே சுப்பிரமணியதேசிகனாகிய எமது தலைவன்.

அக்குருபரன், மகாவாக்கியப் பொருளாகவுள்ள ஆதீன முதற்குரவராகிய ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியனுடைய திருநட் சத்திரமாகிய மகரத் தலைநாளிலே (தை - அசுபதி) அக்குரு மணிக்கு விதிப்படி அபிடேக ஆராதனைகளைச்செய்து, வழக்கப் படி மாகேசுரபூசையினையும் மகிழ்வுற நடாத்தி, பந்தியிலிருந்து திருவமுது செய்தருளி, ஞானிகளோடிருந்து ஞானநூற்பொரு ளைச் சிந்தித்திருந்து, மாலைக்காலம்வரத் திருமஞ்சனமாடி, கல் லாடையுடுத்து, விபூதி உருத்திராக்கங்களை அணிந்து, தம்பி ரான் இருவர் இருபாலுங்கைகொடுத்துவர, பாதுகையிலிவர்ந்து பல்லியமுழக்க, திருச்சின்னங்கள் ஒலிப்ப, கவரி ஆலவட்டம் தாலவட்டம் முதலிய விருதுகளுடன் கவிகைநிழற்ற, தேவாரம் ஓதுகின்றவர்கள் தாளமொற்றிக்கொண்டு தேவாரம் ஓதிவர, வெளிப்போந்து சிவிகையில் எழுந்தருளினர்.

அவரெழுந்தருளிவரும் சிவிகையைச்சூழச் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நாற்பாதங்களையும் அநுட்டிக்கும் அடியார்கள் முதலியோர் கைகளைக்கூப்பி மனங்கரைந்து அரகர முழக்கம்செய்து நெருங்குவாராயினர். பன்னிருகோடி சூரியர் ஒரு சேரப் புறப்பட்டாற்போலத் தீவர்த்தி வரிசைகள் ஒளிசெய்தன. பெண்கள் ஆலத்தி சுற்றிவிட்டு அன்னம்போலப் பெயர்ந்து சென்றனர். மலர்களையும் சந்தனத்தோடு கூடிய பன்னீரையும் வாரி விசிறினர். மெய்கண்டான் சந்ததிக்குக் கண்போன்ற பெருமானே! உலகம் புகழ்ந்தேத்தும் குரவர் ஏறே! ஞானப் பிழம்பே! வரமணியே! பெருவாழ்வே! அருட்சுப்பிரமணிய தேசிகனே! ஞானத்தை நாங்களெல்லாம் பெற முன்பு செய்த தவமே காரணம்; இனி எங்களுக்கு ஏதும் குறையில்லை யென்று பலர் போற்றினர். சூரியன்முன் இருளிருந்தாலும்

ஞான சூரியனாகிய உம்முன் சிறிதும் அகவிருள் நில்லாது என்றார் சிலர். சித்தாந்த சைவமொன்றே பிறப்பிறப்பினைத் தவிர்க்கும்; ஏனைய சமயங்களாகிய பிதற்றுக்களெல்லாம் பவத்தையே மேலும் மேலும் பெருக்கும் என்றார் சிலர். இந்நில வுலகு பெற்றபேறு என்னென்றார் சிலர். எல்லாரையும் ஆட் கொண்டருளும்பொருட்டுத் தோன்றிய குருமணியோ? என்பர் சிலர். விண்மணியே! ஞானவிளக்கே! கண்மணியே! என்பர் சிலர். முழுமாயமுடைய சாருவாகன் முதலியோரும் நின் அருள் பொருந்தப் பொலிவடைவார் என்பர் சிலர். மூலப்பிரகிருதி வரை தத்துவவிசாரணையுடைய பாஞ்சராத்திரிகளும் வெண்ணீ றொன்றே அணியத்தகும் என்பார். இனி விரிவாகக் கூறுவ தென்! எல்லாம் இனி மாறில் சைவமேயாம் என்றார் சிலர். பிரமனுக்குப் படைக்கும் வேலையும், இயமனுக்குக் கொல்லும் வேலையும் நம்முடைய குரவர்சிகாமணியாகிய சுப்பிரமணிய தேசிகன் பேரருளை வாரி வீசிச் செல்லுந்திறத்தால் ஒழிந்தன எனக் கூறினர் சிலர்.

திருவாவடுதுறையாகிய தலம் ஒன்றுமே திக்கெல்லாம் போற்றத் திகழ்வது என்று பேசினர். அருள் மிகுந்த மாசிலா மணியீசரே இச்சுப்பிரமணியதேசிகர், அல்லாது வேறென்ன சொல்லவுள்ளது என்பர் சிலர். நெற்றிக்கண்ணை மறைத்து வந்தது எதற்காக என்பர் சிலர். அதற்குப் பதில் கூறுபவர் போல, மன்மதன் கரும்பு வில்லை வளைத்துவந்து மாறுபடா மையை நினைந்தே என்பார் சிலர். தலைமாலையை ஒழித்து வந்தமைக்குக் காரணம் என்ன என்பார் சிலர். பிரமனும் மாலும் நாமே பிரமப்பொருள் என்று சங்கை யடையாமையாற் போலும் என்பார் சிலர். பிறைச் சந்திரனை மறைத்து வந்தமை தான் என்னே! என்பார் சிலர். மாசு இல்லாதவருக்கே கதி யளிப்போம் என்பதை யாரும் அறிந்துய்யவே என்பார் சிலர். இவ்வாறு தரிசிக்க வருவோரெல்லாம் பலப்பல சொல்லிச் சொல்லி இன்புறுவார். இவ்வாறு பாட்டுடைத் தலைவராகிய சுப்பிரமணிய தேசிகர் பவனிவருவாராயினர்.

நன்மைபொருந்திய என் மனமே! அத்தேசிகப் பெம்மானை முடிமுதல் அடிமுடியக் கண்படைத்த பேறெனக் கண்டு இன்புற்றேன். பெரிதும் அணைய ஆசைப்பட்டேன். அதனால் (ஆசு - ஐ) குற்றத்தைப் பொருந்தினேன். முன்னம் அன்னங் காணாதானைக் கண்ட மயக்கத்தால் யானும் அன்னம்

காணுதவளாயினேன். முன்னம் ஒருகோலம் அறியாதானைக் குறுகிக் கைகூப்பித் தொழுதும் அவன் கோலம் முழுவதும் காணப்பெருதே திரும்பினேன். வளை ஆழிகளை மாலுக்கு ஈந்த அந்த வள்ளலைக்கண்டு என் வளை ஆழிகளைத் தோற்றுவிட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். தாயைவெறுத்த தன்மையை யுடைய அப்பெருமானைக்கண்டு நானும் தாயால் வெறுக்கப் பட்டேன். தனி முதலாகிய அப்பெருமானைக்கண்டு நானும் தனியானேன். மனமே! என் வருத்தந்தீர அருள்வாய். கோபி யாதே. அவனை முயங்குவதற்கு ஆவனசெய். உன்னைப்போன்ற துணை எனக்கு எங்கேனும் கிடைக்குமோ? நீ துணை செய்யா விடில், வேதாகமங்கள் விதித்த விதியனைத்தும் என்னும்? அட்டாங்கயோகம் முதலியன பயில்வதெல்லாம் உன்னை வசஞ் செய்தற்காகவன்ருே? போகம்நுகர்தல், தவஞ்செய்தல், கற் றுணர்தல், நட்புச்செய்தல், வன்மை, ஈகை, புத்திமுத்திகள் இவைகளெல்லாவற்றிற்கும் உறுதுணை நீயே ஆவாய். இல்லறத் தாரைத் துறவறத்தாராகச் செய்தற்கும், துறந்தாரை இல்ல றத்தாராக்குதற்கும், அறத்தை மறமாகவும் மறத்தை அற மாகவும் செய்தற்கும் வன்மையுடையாய். உன்னை ஒடுக்கு தலே முத்திக்கு வழி; உன்னைப் பொறிவழி ஓடவிடுதலே பந்தமாம். மற்றும்,

கலக்கமின்றி உன்னுல் உயர்ந்தநிலையிலே சேர்ந்தோரை எண்ணிக் கணக்கிடமுடியுமா? உன்னுல் இழிந்த நிலையிலே சென்று அழிந்தோரைத்தான் எண்ணித் தொகைபண்ண இயலுமோ? ஆதலால், மனமே! அந்தி வானத்தையொத்த சிவந்த திருமேனியினையுடைய அப்பெருமானை எந்த மேனி யெடுத்தானும் வரச்செய்வது உன்கடனும். அம்மா! தில்லைவா ழுந்தணர் முதலாகவுள்ள திருத்தொண்டர்கள் யாவரும் சிவமாந் தன்மைப் பெருவாழ்வையடைந்து இன்புற்று வாழ்வதற்கெல் லாம் காரணம் நீயே யன்ருே! உன்னுடைய சிறப்பை எடுத்துச் சொல்லவல்லார் யாவரே! மைந்தன் என்ன குற்றம் செய்தா லும் தாய் வெறுக்கமாட்டாளே! நீ கருணையினுல் தாயையே யொப்பாவாய். நீயே தூதாகச்சென்றுசொன்னுல் என் காரியம் தவறுமோ? தவருதே.

இனி, தூதுப் பொருள்களுள்ளே அன்னத்தை அனுப் புவோமென்ருல் அது முன்னே அம்முன்னவன் முடியைக் காண்பதரிதாயிற்றே! அஃது எவ்வாறு இப்போது அவர்

முகத்தைச் சென்றணையும். முன்பே மயில்போலும் சாயலினை யுடைய உமாதேவியாரை ஒருகூருகவுடைய அப்பெருமான் முன்னர் மயில் எவ்வாறு செல்ல உடன்படும்? சென்ருலும் பயனில்லையே. நெற்றிக்கண்ணுல் நீருன அந்த மன்மதனைச் சுமந்து செல்லும் கிளி தூது போதற்கு ஒத்துக்கொள்ளாதே. மேகத்தைத் தூதுசெல்ல விடுத்தால் முன்பு சடைக்காட்டிலே அடங்கிக்கிடப்பதாகலின் இன்று அது என்னகாரியஞ்செய்யும்? நாகணவாய்ப்புள்ளைத் தூதாக விடுவோமாயின் பொருட்செறி வுடைய தேவார திருவாசகங்களாகிய அருட்பாக்களைக் கேட்டு இன்புற்ற செவிகள் இதன் குழறுபடைச் சொல்லைக் கேட்டு இன்புறுவதாமா? சித்திரப் பதுமைபோலும் தோழியைத் தூதாக அநுப்பின் திருமுன்னர்ச் சென்றடைய வன்மையுடைய ளாவாளோ? மன்மதனுக்குரிய சின்னமாக விளங்கும் குயிலோ அம்முதல்வன்முன் தூதாகச் செல்லமுடியாதே. தென்றலை ஒருவாறு தூதாகச்சென்றுவர விடுக்கின், பாம்புகளை அணிகல மாகவுடைய அப்பெருமானிடம் செல்லச் சிறிதும் உடன்படாமல் மறுத்துவிடுமே. ஏனெனில், காற்றை உணவாகக் கொள்ளுவது அதுவன்ருே. நான் இனி என்னசெய்வேன்? வலிய மனமே! உன்னைப்போல் எனக்கு உற்றதுணை வேறு யாவர்?

மேலும், தாயனைய கருணையையுடைய எமது குரவர்பிரான் திருமரபு இன்னபெருமையினையுடைத்து எனச் சிறிது சொல்லு கிறேன்; கேள். திருக்கயிலாயமலையிலே சீகண்ட பரமசிவன் பால் அருள்பெற்ருர் திருநந்திதேவர். அத்திருநந்தி தேவர்பால் அநுக்கிரகம் பெற்றவர் சனற்குமார முனிவர். அம்முனிவர்பால் உபதேசம் பெற்றவர் சத்தியஞான தரிசனிகள். அக்குரவர்பால் திருவருள் பெற்றவர் பரஞ்சோதி முனிவர். இவர்கள் யாவரும் கயிலாயவாசிகள். இவர்கள் அகச்சந்தானத்தார் எனப்படுவார்.

நிலவுலகத்திலே உபதேச பரம்பரை இடையருது நிலை பெற அப்பரஞ்சோதிமுனிவர் ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுருக்கு அநுக்கிரகஞ்செய்தார். அவர்பால் அருணந்திதேவநாயனுரும், அவர்பால் மறைஞானசம்பந்தரும், அவ்வாசிரியர்பால் உமாபதி சிவாசாரியாரும் முறையே அநுக்கிரகம் பெற்றனர். இவர்கள் நால்வரும் புறச்சந்தான குரவர்கள் என்று சொல்லப்பெறுவர். உமாபதிதேவநாயனுர்பால் அருணமச்சிவாயரும்; அவர்பால் சித்தர் சிவப்பிரகாசரும், அக்குரவர்பால் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரியரும் முறையே உபதேசம்பெற்றனர். இப்பஞ்சாக்கர

பரமாசாரியரே திருவாவடுதுறை ஆதீன முதற்குரவர். இம் முதற்குரவர்பால் உபதேசம்பெற்ருர் மறைஞானதேசிகர். இவர் இவ்வாதீனத்து இரண்டாம் குரவர். மூன்ரும் குரவராகிய அம்பலவாணதேசிகர் ஸ்ரீ நமச்சிவாயதேசிக பரமாசாரியருடைய அநுக்கிரகம் பெற்றவராவார். அவருக்குப்பின் உருத்திரகோடி தேசிகரும், வேலப்ப தேசிகரும், முற்குமாரசாமி தேசிகரும், பிற்குமாரசாமி தேசிகரும் ஒருவர்பின் ஒருவராய் உபதேசம் பெற்று ஆசாரிய பீடத்தமர்ந்தனர். அவருக்குப் பின் எட்டாவது பீடாதிபதியாய் எழுந்தருளியவர் மாசிலாமணிதேசிகர். அவருக்குப் பின் இராமலிங்கதேசிகரும், வேலப்பதேசிகரும், பின்வேலப்பதேசிகரும் முறையே சிவஞான உபதேசம்பெற்று ஆசாரியர்களாய்ப் பீடத்தமர்ந்தனர். பன்னிரண்டாவது குரவராய் வந்தவர் திருச்சிற்றம்பலதேசிகர். அவருக்குப் பின்னர் அம்பலவாணதேசிகரும், அவருக்குப் பின்பு சுப்பிரமணிய தேசிகரும், அவருக்குப்பின் அம்பலவாணதேசிகரும் முறையே ஆசாரியர்களாக எழுந்தருளி ஞானச்செங்கோல் செலுத்தினர். அவருக்குப் பின் பதினூருவது பட்டத்திலே வீற்றிருந்தருளும் ஞானசாரியரே சுப்பிரமணியதேசிகசுவாமிகள். இதுவரையில் கயிலாய பரம்பரை - திருநந்திமரபு - மெய்கண்ட சந்தானத்து வந்த ஆசிரியன்மார்களையெல்லாம் உனக்கு விரிவாயறிவித்தேன். இப்போது ஞானசாரியராகவுள்ள ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்பால் நீ போய்த் தூதுவந்த காரியத்தைச் சொல்லும் சமயமும் சொல்லுவேன்; கேள். மனமே! செல்லும் காரியத்திலே கண்ணும் கருத்துமாகச் செல்லவேண்டும். வழியிலே பராக்குப் பார்த்துவிடாதே. கூடத்தகாதவர்களோடு கூடாதே. கூடத்தகாதவரும் இன்னின்னர் எனக்கூறுவேன்: கவனமாய்க் கேள். நான்கு பூதங்களே உள்ளன, மகளிர்பால் அநுபவிக்கும் இன்பமே முத்தி, அதனைவிட முத்தி வேறில்லை என்பார் உலகாயதர்; அவரைக்கூடாதே. பவுத்தர், சமணர், சாக்தர், மீமாஞ்சகர், தருக்கநூலார், பாஞ்சராத்திரிகள், நிமித்த காரண பரிணமவாதிகள், சிவசமவாதிகள், நாமே பிரமமென்று கூறும் மாயாவாத வேதாந்திகள் இவர்களுடைய கூட்டுறவும் உனக்குச் சிறிதும் பொருந்துவனவல்ல. ஆகலின், இவர்களைக் கண்ணெடுத்தும் பாராதே. அவர் கூறும் கூற்றுக்களைக் காது கொடுத்தும் கேளாதே. நேரே திருவாவடுதுறைக்குச் செல். அந்தச் சிவராசதானியை வீதிவலம்வந்து, தென்முகப்பு வாயிலே அடைந்து, கொலுமண்டபத்திலே புகுந்து, அங்கு உள்ள

தம்பிரான் சுவாமிகளையும் அவர்களது பக்கத்திலே உள்ளாரையும் வணங்கிப் போற்றுக.

கொலுமண்டபத்தின் முகப்பில் உள்ள தம்பிரான் சுவாமிகளில் சிலர், சாத்திர பாடங்களைப் படித்துக்கொண்டு தனியே இருப்பார்கள். சிலர், சிந்தனையில் இருப்பார்கள். சிலர் அப்பாடங்களைப் பலருக்கும் எடுத்துச் சொல்லிக்கொண்டிருப்பார்கள். சிலர் தமது சடையை விரித்துத் தனியே காயவைத்துக் கொண்டிருப்பார்கள். அவரவர் பக்கத்தில் பலர் சூழ்ந்திருப்பார்கள். அவர்களையும் வணங்கிச்செல். கயிலையில் அதிகார நந்தியிருப்பதுபோல அதிகாரஞ் செலுத்தியிருக்கும் திருச்சிற்றம்பல முனிவரையும் வணங்கிப்போற்றுக. அவருடைய உத்தரவைப்பெற்று உள்ளேசென்று திருமாளிகைத்தேவர் சந்நிதியை அடைந்து வணங்கித் துதித்துப் போற்றவேண்டும். அப்பால், ஆதீனத்துப் பிரதம பரமாசாரியராகிய ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகளின் சந்நிதானத்தை அடைந்து அவருடைய திருவடிகளில் அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்களைச் செய்து எழுந்து கும்பிட்டு நில்.

பின்பு, இரண்டாம் ஒடுக்கத்தில் சென்று அரண்போல விளங்கும் கலைஞான வாழ்வை, கருதுவார் பேற்றை, நீங்காத புலவர்குழாம் சூழவிருந்து வினாவிடையாக நூற்பொருள்களைப் பேசி மகிழ்ந்து வீற்றிருக்கும் அமுதம்போல்வானை, தீய குணங்களெல்லாம் நீங்கி நல்லகுணம் பதிந்து விளங்கும்படி இனிமையாகப் போதித்து நல்லாதரவு செய்பவனை, நமச்சிவாயன் என்னும் நன்னாமம்பூண்ட இரண்டாம் குருமணியை வாழ்த்தி வணங்கி வலஞ்சூழ்க. அதன் பின்பு, குருமூர்த்தி கோயிலையடைந்து பூசையில் வணங்கிப்போற்றுக. உள்ளம் நெக்குருக அன்பினால் பிரியாவிடைபெற்று, அடியார்கள் அமுதுசெயும் கோயிலையும்வணங்கி, முதலொடுக்க வாயிலை மெல்ல அடைந்து, அங்கே சாந்தகுணமுடையவராய் உள்ளவர்களைச் சந்தித்து மகாசந்நிதானத்தைத் தரிசித்தற்குரிய சமயம் தெரிந்துகொள். பின்பு மெல்ல உள்ளே புகு. அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கிக் கும்பிட்டு எழுந்து சேவித்துநிற்கும் முனிவர்களுக்குத் திருநீறு வழங்கும் அப்போது ஒன்றும் சொல்லாதே. பல வகைப்பட்ட புலவர்களும் பாட்டுக்களைப் பாடிவந்து படிக்கும் போதும், வந்த கடிதங்களையும் அநுப்பும் கடிதங்களையும் வாசித்து நிற்கும் இராயச வேலைபார்க்கும் அவர்களுக்குச்

செய்திகள்சொல்லும்போதும், அன்புடையராய்ப் பூசித்துநிற்கும் தொண்டர்கள் மகிழ்தர நூற்பொருளை விரித்துரைக்கும் சமயத்திலும், நெருங்கிவந்து வணங்கும் அரசர்கள் பிரபுக்கள் மகிழ அவர்கட்குப் பாராட்டுச் சொல்லும் சமயத்தும், பிராமணர்கள் தமது இல்லாக்குறையைத் தெரிவிக்கச் செவியேற்று அவர்கள் குறைகளைத் தவிர்க்கும்பொழுதும், சிதம்பரம் முதலிய சிவதலங்களுக்கு நித்திய நைமித்திக பூசைக்குரியனவற்றை நன்கு விசாரித்துக் கட்டளையிடும் காலத்திலும், வந்து வணங்கி நிற்கும் மாணவச் சிறுவர்களைப் பாடம்கேட்டு மகிழும் காலத்தும், ஆனந்தக்களிப்புப்பாடல்களைச் சொல்லிச் சிலர் ஏத்துங் காலத்தும் நீ சென்ற காரியத்தைச் சொல்லாதே. பின்பு சயனம்செய்துகொள்ளுதற்குச் செல்லுகின்றசமயத்திலே நீயும் செல். வெண்ணிற விபூதியைத் திருமேனிமுழுவதும் பூசி விளங்கும் எங்கள் பூரணப்பொருளைத் திருவடிகளில் விழுந்து நிலமிசை எட்டுறுப்பும் பொருந்த வணங்கி எழுந்து, பெருங்குணக்குன்றே! மெய்ஞ்ஞானக்கொழுந்தே! கருணைக்கடலே! ஆன்மாக்களுக்கு நன்றருளும் நாயகமே! எங்களை அநாதி காலந்தொடங்கிப் பந்தித்து நிற்கும் ஆணவமுதலிய மலக்கட்டுகளை நீக்கி இன்பவீடு அளிக்க உருக்கொண்டுவந்த கருணை வாழ்வே! சாந்தகுணமலிந்த சிந்தையினையுடைய அடியார்பால் பிரதியுபகாரம் வேண்டாது உதவும் கற்பகம்போல்பவரே! எம்முடைய பேருதவுள்ளவரே! ஆனந்தவெள்ளமே! ஞானக்கரும்பின் பிழிவே! உண்மையடியார்கள் தவத்தின் பயனே! அருட்சிந்தாமணியே! காமதேனுவே! துன்ப இருளைப் போக்கும் ஒப்பற்ற ஒளியே! கெடாத சிறந்த மாணிக்கமே! கோமுத்தித் தலத்திலேயுள்ள வாழ்வே! அருள்வடிவாகிய ஸ்ரீ சுப்பிரமணியதேசிகப் பெயரையுடைய பெம்மானே! ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தியே! என்று பற்பல துதிகளையும் சொல்லிச் சொல்லி வாழ்த்துக. மிக்க கருணையுண்டாகும்படி உன்னுடைய சிறுமையையும் அப்பெருமானுடைய பெருமையையும் மிக எடுத்துச்சொல்லிப் போற்றுக. அதன் பின்பு, அவன் கனிந்த திருவுளத்திலே அருள்பெருகுமாறு என்னுடைய பிரிவாகிய பாலையொழுக்கத்தை உணர்த்தி, அவனால் அருளப்படும் செங்கழுநீர் மாலையை வாங்கிக்கொண்டு, விரைந்து வந்து என்னை இன்பநிலையில் வைப்பாயாக என்பதே இந்நூலின் பொருட்சுருக்கமாம்.

உ
சிவமயம்

# ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது

காப்பு

நேரிசைவெண்பா

வரமணிமா டத்தா வடுதுறைவா ழுஞ்சுப்
பிரமணிய தேசிகன்பாற் பெட்புற் - றுரமணியின்
ஆய்ந்துதஞ்ச மாயொருகோட் டண்ண லருட்கிலக்கு
வாய்ந்துநெஞ்சே தூதுசென்று வா.

நூல்

கலிவெண்பா

பூமேவு செங்கமலப் பொற்றவிசின் மேயவனும்
மாமேவு மார்பினெடு மாயவனும் - ஓமே(வு) 1

---

காப்பு: வரம் மணி மாடத்து – சிறந்த கற்களால் இழைத்துச் செய்யப்பட்ட மாடங்களையுடைய. மணி - மாணிக்கம் முதலியன. வரம் – சிறப்பு. பெட்பு - விருப்பம். உரம் அணியின் ஆய்ந்து. உரம் - அறிவு. அணியின் - அழகாக; ஒழுங்காக என்றபடி. அறிவை ஒழுங்குபடுத்திக் கொண்டு ஆராய்ந்து: அவ்வாறு ஆராய்தல் பயனில்லாத செயல்களில் அறிவு திரிந்து வேறுபடாமல் ஆன்மலாபத்தையே கருதி அதற்குரிய செயல்களிலே தலைப்படுதல். தஞ்சம் – பற்றுக்கோடு. ஒரு கோட்டு அண்ணல் – விநாயகமூர்த்தி. இலக்கு வாய்ந்து – இலக்காகப் பொருந்தி. அருட்கு இலக்கு வாய்தலாவது விநாயகக்கடவுளின் அருளைப் பொருந்துதற்கு ஆன்றோர் ஆசாரப்படி முதற்கண் வணக்கம்செய்து என்றவாறு.

நெஞ்சே! பெட்புற்று, ஆராய்ந்து, தஞ்சமாய், அண்ணல் அருட்கு இலக்குவாய்ந்து, தேசிகன்பால் தூதுசென்று வா.

1. செங்கமலப் பொற்றவிசு - செந்தாமரை மலராகிய அழகிய ஆசனம். மேயவன் – பொருந்திய பிரமதேவன். செங்கமலம் ஈண்டுத் திருமாலின் திருவுந்தித்தாமரை. மா – திருமகள். நெடுமாயவன் – திருவிக்கிரமனாகிய திருமால். நெடுமை - விசுவரூபம்: திருப்பெருவடிவு என்க.

அரும்பொருட்பே றெய்து மருண்ஞான சித்தி
தருங்கரும பூமியெனச் சாற்றல் - ஒருங்குணர்ந்து 2

நால்வேத மோது நகுநீற்று லைந்துபதத்
தால்வேறு மம்மரையென் றுயாமே - மேல்கீழும் 3

அன்னமு மேனமு மாய்ப்பறந் தும்புகுந்தும்
இன்னமுங் காணு வியல்பினுன் - முன்னமே 4

பாசங் கலந்த பசுக்களி லோர்வகைக்கா
நேசங் கலந்த நிகழ்ச்சியால் - வாசம் 5

---

2. ஓம் மேவு அரும் பொருட்பேறு எய்தும் இயல்பினுன் - சிவபெருமான். ஓம் மேவு அரும்பொருள் – பிரணவப்பொருள். ''ஓங்காரத் துட்பொருளாய் நின்றுன் கண்டாய்''. ஓங்காரத் துட்பொருளை'', ''ஓங்கார மெய்ப்பொருளை'' (திருநாவு - தேவா). பிரணவப்பொருள் தானே என்பதை உயர்ந்தோர் உணர்ந்து உய்யுமாறு 'பிரணவ புஷ்ப'மாகிய கொன்றைமலர் மாலையைச் சிவபெருமான் அடையாளப்பூமாலையாக அணிந்துவிளங்குகிறுர். ''பிரணவத்துள் மேயோர் பிரமன் மால் என்பார், முரணவிக்கும் கொன்றையந்தார் முன்னேன்'' என்பது திருவிடைமருதுருலா - 18. மற்றும், இந்நூலாசிரியர் ''திருமன்னு மணிமார்பன் தேமன்னு தாமரைப்பூந் தேவ ஞகார், உருமன்னு புகழ்க்குடிலைக் குரிய பொருள் ஒருதானென் றுலகோர்ந்துய்ய, மருமன்னு செழுங்கடுக்கை மலர்மாலை முடிக்கணிந்து வயங்கா நிற்கும்'' என விநாயகக்கடவுளின் மேலேற்றிக் கூறுவர் (திருவாரூர்த் தியாகராச லீலை - கடவுள்). விநாயகக் கடவுளுக்கும் சிவபெருமானுக்கும் வேறுபாடின்று என்பது கருதத்தக்கது. இனி, ''பிரணவத்தி னுரியபொருள் பிறரென்று பேசிடுவார், முரண வித்தற் காகமங்கள் முதலாய வேண்டுபவோ, கரணவிகற் பங்கடப்பாய் காவதமெண் ணிலகமழும், திரண்மிகுத்த செழுங்கொன்றை மாலிகை சேர் தரக்கண்டும்'' (நாகைக்காரோ - புண்டரீக: 22). என்பதனுலும் அறியப்படும்.

3. நால்வேதம் – இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பன. வேதங்களினுல் புகழ்ந்து பேசப்படும் திருநீறு. நகு – விளங்கும். ''வேதத்திலுள்ளது நீறு'' (சம்ப - தேவா). வேதசிரசாகிய பஸ்மஜாபால உபநிடதமும் நீற்றின் பெருமையை விதந்தெடுத்தோதும். ஐந்து பதத்தால் - திருவைந்தெழுத்துக்களால். திருவைந்தெழுத்தை அஞ்சுபதம் என்பர். ''அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி'' (சுந்த - தேவா). சிகாரம் சிவத்தையும், வகாரம் அருளையும், யகாரம் ஆன்மாவையும், நகார மகாரங்கள் மலத்தையும் குறிப்பன; பஞ்சாக்கர சிந்தனையிற் காண்க. மம்மர் - மயக்கம்; ஐ சாரியை. ஒருங்குணர்ந்தும் (2) ஆயாமே என்க.

4. ஏனம் – பன்றி.

5. பசுக்களில் – ஆன்மாக்களில். ஓர் வகைக்கு ஆ(க) - பக்குவப்பட்ட சகலருக்காக என்றபடி.

அளையு மிதழிமதி யஞ்சடில முன்னு<br>
விளையும் பலவும் விலக்கி - வளையும் 6

பிறைதவழு மாடமலி பேரா வடுதண்<br>
டுறைதவழும் புண்ணியத்தாற் றேற்றும் - இறைவன் 7

ஒருமா னெமக்கொளிக்க வோர்கை யமரும்<br>
ஒருமா னொளித்த வொருவன் - பெருமான் 8

மதிமறைத்த மாசெமக்கு மாற்றி யருள<br>
மதிமறைத்த மாசடையா வள்ளல் - நிதியம் 9

இருள்கண்ட யாமவ் விருள்காணு வண்ணம்<br>
இருள்கண்டங் காட்டா திருப்போன் - பொருள்கண்ட 10

மானிடனே யென்ன மருவி யிருந்தாலும்<br>
மானிடனே யென்ன வயங்குவான் - ஈனவுல 11

காயதரைங் கந்த மறுப்பவரொன் றல்லாமுட்<br>
டேயதரென் பார்பரனு மென்பாரும் - சேய்மையிற்கண் 12

---

6. அளையும் - கலந்த. இதழி - கொன்றைமாலை. மதியும் சடிலமும் இதழியும் முதலாகவுள்ள. சடிலம் - சடை. முன் ஆ - முதலாக.

7. வளையும் பிறை - வளைந்த வடிவுடைய பிறைச்சந்திரன்.

8. ஒருமான் எமக்கு ஒளிக்க - ஒப்பற்ற மூலப்பகுதியை எமக்கு நீக்குதற்பொருட்டு. மான் - மூலப்பகுதி. தூலஉடம்பிற்கு முதற்காரணம் சூக்குமவுடம்பு, அதற்கு முதற்காரணம் மூலப்பகுதி, அதற்கு முதற்காரணம் மோகினி, அதுவே பரமமுதற்காரணம் எனப்படும். இங்கே என் தூலவுடம்பை நீக்குதற்பொருட்டாக என்க.

9. மதி மறைத்த மாசு - அறிவை விழுங்கிய ஆணவமலமாகிய குற்றம். மதி மறைத்த மாசு அடையா வள்ளல். மதி - சந்திரன். மதி மறைத்த வள்ளல், மாசு அடையா வள்ளல் எனத் தனித்தனி கூட்டுக.

10. இருள் - ஆணவஇருட்டு. இருளைக் கண்டத்திலே காட்டாதிருப்போன்: விடக்கறையாகிய இருளென்க.

11. பொருள் கண்ட மான் என்றது உமாதேவியை. இடன் - இடப்புறம். மானிடன் - மனிதவடிவுடையான். மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல மும்மலத்தினையுடைய சகலவர்க்கத்தாரை ஆட்கொள்ளும் பொருட்டு மானிடவடிவங்கொண்டு இடப்பக்கத்தில் பொருந்திய உமாதேவியாரையும், பிறைச்சந்திரனையும், கண்டக்கறையையும் மறைத்து வந்தருளினன் என்றவாறு.

12. ஈன உலகாயதர். ஈனம் - இழிவு. இழிவாவது: 'மின்னனைய பொய்யுடலை நிலையென்றும், மையிலகு விழிகொண்டு மையல்பூட்டும் மின்னார்கள் இன்பமே மெய்யென்றும், வளர்மாட மேல்வீடு சொர்க்கம்

டாலுமிரு கைதலைமே லாக்கிமன நெக்குருகிச்
சாலும்வணக் கஞ்செய் தவாச்சிறப்பான் - வேலரசர் 13

தன்னடிநீ ழல்வைகத் தாவாத் திருவரசின்
மன்னடிநீ ழல்வைகு மாதேவன் - துன்னடியார் 14

நந்தான மென்கயிலை நந்திமுதன் மெய்கண்டான்
சந்தான மோங்கத் தழைத்தருள்வோன் - முந்தான 15

.. .. .. 16–19

எண்ணி யுழலு மிருளகற்ற வெங்கள்பால்
நண்ணி யமரு நகுபரிதி - கண்ணிய 20

---

என்றும், பொன்னை அழியாது வளர் பொருளென்று போற்றி, இப் பொய்வேட மிகுதி' காட்டுதல். தாயுமானவர். ''ஈனர்கட்கெளியே னலேன்'' (சம்பந்தர் - தே). ஐங்கந்தம் அறுப்பவர் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐந்துகந்தங்களும் பொன்றக்கெட்டு நிற்றலே முத்தி என்போராகிய சௌத்திராந்திகர்: இவர் நால்வகைப் பௌத்தரில் ஒருசாரார். ஒன்று அல்லா முட்டே அதர் என்பார் - சமணர். முட்டு - கண்டு முட்டு கேட்டு முட்டுக்கள். ''வெண்பொடி பூசுந் தொண்டர் விரவினர் அவரையெல்லாம், கண்டுமுட்டடிகண் மார்கள் கேட்டுமுட் டியானும். .என்றான்'' திருஞானசம்: புரா: 692 செ. அதர் - வழி. பரன் நாம் என்பார் - நாமே பிரமம் என்னும் ஏகான்மவாதிகள். சேய்மை – நெடுந்தொலைவு.

13. தவாச்சிறப்பான் - நீங்காத சிறப்பினையுடையான். வேல் அரசர்- வேற்படையை யேந்திய அரசரும்; சிறப்பும்மை.

14. அடி நீழல் - திருவடிகளின் நீழலில். வைக - தங்க. திருவரசு இத்தல விருட்சம்; படர் அரசு என்பர். துன் - நெருங்கிய.

15. அடியார்கள் தங்களுடைய இடம் எனச்சொல்லும். என் - என்று சொல்லும். நந்திமுதல் - திருநந்திதேவரை முதல்வராகவுடையமரபு; அது 'சயிலாதிமரபு' எனச் சொல்லப்படும். நந்திமுதல் மெய்கண்டான் சந்தா னம் - அகச்சந்தான குரவராகிய திருநந்திதேவர் முதலாகவருவது. மெய் கண்டதேவர் – புறச்சந்தானகுரவரில் முதல்வர். அகச்சந்தான குரவர்கள் - திருநந்திதேவர், சனற்குமாரமுனிவர், சத்தியஞான தரிசினிகள், பரஞ் சோதிமுனிவர் என்னும் நால்வர். புறச்சந்தான குரவர்கள் - மெய்கண்ட தேவர், அருணந்திசிவம், மறைஞானசம்பந்ததேசிகர், உமாபதிசிவம் என்னும் நால்வர். முந்தான - முற்பட்டு விளங்கும்.

16–19 வரையுள்ள கண்ணிகளில் ஸ்ரீ மெய்கண்டதேவநாயனுருக்குப் பின்வந்த ஆசாரியர்களையும் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக பரமாசாரியரையும் குறிக்கப்படும்போலும்.

20. இருள் அகற்ற – அகவிருளாகிய அஞ்ஞானத்தைப் போக்கு தற்கு. நகு பரிதி – விளங்கும் (ஞான) சூரியன்.

ஆலங் கலந்தசுவை யாரமுத மானாலும்
ஆலங் கலவாத வாரமுதஞ் - சாலு 21

மறப்புக் குணத்தை மருவியுழ லெங்கள்
பிறப்புத் தபப்பிறந்த பெம்மான் - சிறப்புறலால் 22

பொன்னை யினிதளித்துப் போகவென்னா தெங்களுக்குத்
தன்னை யினிதளிக்குந் தம்பிரான் - முன்மறைத்த(து) 23

ஒன்றேயென் றோதி யொழித்தெம்மை வேறுபடுத்(து)
ஒன்றே யருள்புரியு மொன்றானான் - அன்றதோர் 24

கற்றார் புரிபிழையுங் கைகுவித்துக் கூப்பிடுத
லற்றார் குணமு மறமறப்பான் - பற்றாச் 25

சுரவடிவி லெங்கண்மனந் தோயாமை யெண்ணி
நரவடிவங் கொண்டுவந்த நம்மான் - விரவுபுழு 26

மென்பயிர் போல விடயத் தரிப்புண்டு
துன்புறுவேங் கட்கோர் துணையானான் - அன்பமையும் 27

நாதாந்த முத்தியருண் ஞானவினோ தன்றெளிவாம்
வேதாந்தன் பேறென்றும் வேண்டாதான் - போத 28

---

22. மறப்புக்குணத்தை மருவி. ''மறந்து மறந்து நினைப்பதனாலே மறவாமலிருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு'' சிவஞானபோதம் சூர்ணிக்கொத்து. பிறப்புத் தப - பிறப்பானது நீங்க.

23. தன்னை இனிது அளிக்கும் தம்பிரான்; தன்னை இனிதளித்தல் ''தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர்'' என்றருளினர் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள். ''தன்னையே தந்தானென்றுந்திபற'' என்பது திருவுந்தியார் - 6.

24. முன் மறைத்தது ஒன்று - அநாதிகாலந்தொடங்கி இறைவனை அறியவொட்டாமல் தடைசெய்த ஆணவமலம்; அது செம்பிற் களிம்பு போல்வது. ஒழித்து - ஆணவமலசத்தி கெட்டொழியச்செய்து. வேறு படுத்து - சுத்தநிலைசெய்து. ஒன்றே அருள்புரிதல் - சிவசத்தி பதித்தல்: ''அமையும் பருவமறிந் தாணவத்தின் கோளடக்கிச் சமயமிது வென்று சிவசத்தி பதித்தாரோ'' நமச்சிவாயமூர்த்தி தாராட்டு. ஒன்று - வீடு பேறு எனினுமாம். ஒன்று ஆனான் - அத்துவிதமாய்க் கலந்துநின்றான்.

26. சுரவடிவு - தெய்வவடிவு; சுரர் - தேவர். நரவடிவம் - மானுடத்திருமேனி. நம்மான் - நம்முடைய மகான்.

27. புழு விரவு மென் பயிர்போல. துன்பு உறுவேங்கட்கு - துன்பத்தை அடையும் எங்களுக்கு; வினையாலணையும்பெயர்.

28. நாதாந்த முத்தி - நாததத்துவங்கடந்த முத்திநிலை; பரமுத்தி. போத - மிகவும்.

நரனென் றிருந்தாலு ஞானமிலா தாரும்
அரனென் றறிய வவிர்வான் - உரனுடைய 29

வல்லரக்க னேற்று மலையாத தாய்ப்புரத்தின்
எல்லரக்க வாங்க லியலாதாய்ச் - சொல்லரக்கு 30

மிக்க புகழாழி மேவிச் சுழலாதாய்ப்
பக்க மரியப் படாததாய்த் - தொக்ககயல் 31

ஆழி கரவாதா யான்ற தமிழ்முனிகைப்
பாழியறிந் தஞ்சப் படாததாய் - வாழி 32

பொறையருவி யெஞ்ஞான்றும் போற்றிவறந் தாலும்
நிறையும்வள நல்கு நிலைத்தாய் - மறைபுகல 33

ஆய்ந்ததரு வைந்தோ டழகியசிந் தாமணியும்
வாய்ந்த பெருங்கருணை மாமலையான் - தோய்ந்தகார் 34

---

29. அவிர்வான் – விளங்குவோன். உரன் – வலிமை.

30. இது முதலாகத் தசாங்கம் கூறப்படும். வல்லரக்கன் - இராவணன். ஏற்றும் அலையாததாய். அலையாததாய் - அசையாததாய். கயிலை மலையானது இராவணனால் இருபது கைகளாலும் அசைக்கப்பெற்றது; இக்கருணைமலை அவனால் அசைக்கப்படாது என்க. புரத்தின் எல் – திரிபுரத்தின் ஒளி. அரக்க – கெடுக்குமாறு. வாங்கல் – வளைத்தல். இம்மலை வளையாதது.

31. புகழாழி: பண்புத்தொகை. பக்கம் – பக்ஷம்; சிறகு. அரியப் படாததாய் – குறைக்கப்படாததாய். முன்னொரு காலத்தில் மலைகளுக் கெல்லாம் சிறகுள்ளன என்றும், அவை இஷ்டப்படி பறந்துசென்று நகரங் களைப் பாழ்படுத்திய என்றும், இந்திரன் தன் வச்சிராயுதத்தால் சிறகுகளை அறுத்தான் என்றும் வரலாறு கூறும். இந்த மலை சிறகு அரியப்படாதது.

32. ஆழி கரவாதாய் – கடலின்கண் ஒளித்துக் கொள்ளாததாய். மைந்நாகமலை இந்திரனுக்கு அஞ்சிக் கடலில் ஒளித்துக்கொண்டது என்பது வரலாறு. ஆன்ற - அறிவான் அமைந்த. விந்தியமலை அகங்காரத்தால் வழியை அடைத்துக்கொண்டு உலகத்தைத் துன்புறுத்தியதை அறிந்த அகத்தியமுனிவர் அதன் செருக்கை அடக்கிப் பூமியில் அழுத்தியருளினர் என்பது வரலாறு.

33. பொறை – பொறுமை. பொறையருவி: பண்புத்தொகை. வறந்தாலும் – வறண்டுபோனாலும்.

34. தரு ஐந்து – கற்பகம், மந்தாரம், பாரிஜாதம், சந்தானம், அரிசந்தனம் என்பன. கயிலைமலை இராவணனால் அசைக்கப்பெற்றது, மேருமலை சிவபெருமானால் வில்லாக வளைக்கப்பெற்றது, மந்தரமலை தேவர் களால் பாற்கடலில் மத்தாக இட்டுக் கடையப்பெற்றது, ஏனைய மலைகள் எல்லாம் இந்திரன் வச்சிராயுதத்தால் சிறகுகள் அறுபட்டன, விந்தியமலை

ஆணவந் தீர்ந்த வறிவாங் குறிஞ்சியெனும்
நீணவ மாயநில நின்றெழுந்து - காணவெழு 35

காமமெனும் பாலை கடந்தேறி மாயையெனும்
நாமநெடு முல்லை நகப்புகுந்தே - ஏமமென 36

உற்ற பசுக்கவர்ந்தாங் கோங்காய ராயவைவர்
முற்ற வுஞற்றுதொழின் மோதியே - செற்ற 37

உளமா மருதநிலத் துற்று விடயக்
குளமாய வெல்லாங் குலைத்துத் - தளமாருங் 38

கண்ணுய நெய்தல் கலந்துமலக் கட்டுற்ருர்
அண்ணுமே யெவ்விடனு மாய்ப்பெருகி - யெண்ணு 39

நிலமா விசும்பு நிறைந்தென்றும் வற்ரு
நலமாமா னந்த நதியான் - புலமாரும் 40

முப்பகுதி யாயவுயிர் முத்தி பெறவாழும்
முப்பகுதி மாயை முழுநாடன் - செப்பரிய 41

---

அகத்தியர் கரத்தால் அழுத்தப்பட்டது, மைந்நாகமலை வச்சிராயுதத்துக்கு அஞ்சிக் கடலில் ஒளித்தது. இவ்விதக் குறைகள் ஒன்றும் இம்மலைக்கில்லை. அன்றியும் பொறையாகிய அருவியையும், நிறைந்த வளப்பத்தையும், ஐந்தருவையும், சிந்தாமணியையும் இம்மலையுடைத்து என்க.

35. கார் ஆணவம் - கரிய ஆணவமலம்: இருண்மலம் என்றும் கூறுவர். "காரிட்ட ஆணவக் கருவறை", "காராரும் ஆணவக் காட்டைக் களைந்து" தாயுமானவர். நீள் நவம் ஆய நிலம்.

36. நாமம் - அச்சம். ஏமம் - பாதுகாவல்.

37. ஏமம் என உற்ற பசு; ஏமம் - செல்வம்; பாதுகாவல் எனினுமாம். பசுக்கவர்தல் - வெட்சித்திணை. ஆயர் - இடையர். முற்ற உஞற்று தொழில் - முற்றுகைசெய்தலாகிய தொழில்.

38. செற்ற உளம் ஆம்.

39. மலக்கட்டு - மலபந்தம். அண்ணுமே - நெருங்காமல். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் நிலங்கள் உருவகம் செய்யப்பெற்றன. கருணைமலை (34), ஆனந்தநதி (40), மாயைநாடு (41), மனம்நகர் (44), மறைப்பரி (47), ஞானவாரணம் (55), பாமாலை (59), காவிக்கொடி (61), நாதமுரசு (62), ஆற்றுவிக்கும் ஆணை (63) முதலியனவும் உருவகம்.

41. முப்பகுதி ஆய உயிர் - விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர். முப்பகுதி மாயை - அசுத்தமாயை, மிச்சிரமாயை, சுத்தமாயை.

மெய்யாய வன்பர் விடயக் கரவவுருறல்
செய்யா மனமாந் திருநகரான் - கொய்யா 42

மரைமல ராளி மனச்சாலை நின்றும்
விரையநால் வாயில் வெளிப்பட்(டு) - உரைசிறந்து 43

மண்ணக மெல்லா மருவிப் பரந்தோடி
விண்ணக மெல்லாம் விராய்த்தாவி - எண்ண 44

ஒருநாட்டிற் காடா யுறைகுவதல் லாமல்
ஒருநாட்டில் வெற்பா யுறைந்தும் - பெருநாட்டில் 45

ஏனையபோல் வெந்புறத்தி லேந்துவதல் லாதுதலை
மேனை யுருது மிகத்தரித்துஞ் - சோனைக் 46

கடலுலக மீர்த்துக் கடுகி நடக்கும்
உடலின் மறைப்பரிமா வுள்ளான் - அடல்சேரும் 47

மூலமல வேரென்னு மொய்கூர் தறிமுறித்துச்
சால மலமாந் தளையறுத்து - ஞாலமுதல் 48

---

42. விடயக்கரவர் உறல்செய்யா. மெய்யாய அன்பர் – உண்மைத் தொண்டர்கள். ஐம்புலச் சேட்டைகளாகிய வஞ்சகர். கரவு – வஞ்சனை. கரவர் உறுதல் செய்யாத மனநகர் எனக்கூட்டுக. அன்பர்கள் கரவரை உருத எனினும் ஆம்.

43. கொய்யா மரைமலர் ஆளி – பிரமன். கொய்யாமரைமலர் என்றது திருமாலின் உந்தித்தாமரையை. விரைய - விரைந்து. நால்வாயில் – நான்கு முகங்களாலும். நால்வாயில் என்றது ஒருநயம். வாயில் – வழி.

45. ஒருநாட்டில் காடு – சோழநாட்டிலே வேதாரணியம் என்பது; மறைவனம், திருமறைக்காடு. ஒருநாட்டில் வெற்பு – தொண்டை நாட்டிலே திருக்கழுக்குன்றமாகிய வேதகிரி, வேதாசலம். இங்கே வேதங்கள் மலைவடிவங்கொண்டு சிவபெருமானைத்தாங்கி நிற்பன என்பது வரலாறு.

46. வெ(ரி)ந் – முதுகு. ஏனைய குதிரைகள் தலைவரை முதுகில் சுமந்து செல்வது வழக்கம்: தலைமேல் சுமந்து செல்லுதல் எங்கும் வழக்கமில்லை. நை(தல்) உருது. வேதக்குதிரை உபநிடதங்களாகிய சிரசின்மேல் தலைவராகிய சிவபெருமானை வருத்தமில்லாமல் தாங்குவன.

47. மறைப்பரிமா - வேதங்களாகிய குதிரைகள். 'மறைக் கவனப் பரியார்' என்றூர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்.

48. மூலமலம் – ஆணவமலம். அடல், மொய் - வலிமை: ஒரு பொருட் சொற்கள். தளை – கட்டு.

ஆறுறு தத்துவ மாய படைதுரந்து
மாறுத கன்ம மரஞ்சாய்த்துக் - கூறு 49

மனமாம் பரிமாவை மாய்த்துமத வேள்கைச்
சினமாங் கரும்பொடியச் சீறி - இனமாங் 50

குடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு தோலும் - இடையிடையே 51

வைத்த தடியும் வழும்பும் வெளித்தோற்ற
மொய்த்த கருந்தோலின் மூட்டொழியக் - கைத்து 52

மடமா தரைமிதித்து வைத்த சமயத்
தடமார் படுகுழிசா ராமல் - இடமார் 53

குறையாத வானந்தக் கொள்ளைநீ ராடி
மறையா கமமா மணிகள் - நிறைய 54

இருபாலுந் தூங்கி யிரட்ட வெழுந்து
வருபான்மை ஞானமத மாவான் - ஒருநான்கு 55

---

49. ஞாலம் முதல் – பிருதிவிதத்துவ முதல். ஆறுறு தத்துவம் – முப்பத்தாறு தத்துவங்கள்; ஆன்ம தத்துவம் 24, வித்தியாதத்துவம் 7, சிவதத்துவம் 5.

50. பரிமா – குதிரை. மதவேள் - மன்மதன்.

51-2. ''குடருங் கொழுவுங் குருதியும் என்பும், தொடரும் நரம்பொடு தோலும் – இடையிடையே, வைத்த தடியும் வழும்பும்'' என்பது நாலடிச்செய்யுட்பகுதி – 46. குடர் - குடல்; இறுதிப்போலி. இடை இடை: அடுக்கு தொறுப்பொருளில் வந்தது. ''என்பிருத்தி நரம்பு தோல் புகப்பெய்திட்டு'', ''கால்கொடுத் தெலும்புமூட்டிக் கதிர்நரம் பாக்கை யார்த்துத், தோலுடுத் துதிரமட்டித் தொகுமயிர் மேய்ந்த கூரை'', ''கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிறைத் திறைச்சி மேய்ந்து, தோல்படுத் துதிரநீராற் சுவரெடுத் தெடுத்து. .வைத்தார். .'' (திருநாவு: தே). ''என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப். புன்புறந் தோலைப்போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட், டொன்பது வாயிலாக்கி ஊன்பயில் குரம்பை செய்தான். .'' சிந்தாமணி.

54. கொள்ளைநீர் – மிக்கநீர்.

55. 48 முதல் இதுவரை ஞானத்தை யானையாக உருவகம் செய்யப் பட்டது காண்க; உருவகவணி. இதற்கேற்பத் தறிமுறித்து, தளையறுத்து, படைதுரந்து, மரஞ்சாய்த்து, பரிமாவை மாய்த்து, கரும்பொடியச்சீறி, மூட்டொழியமிதித்து, படுகுழி சாராமல், நீராடி, மணிகள்தூங்கி யிரட்ட வரும் என யானைகளுக்குரிய தொழிலை விளக்கிக்கூறினர். ''கலைதேர் நமச்சிவாயகுரு'' என்னும் முதற்குறிப்புடைய பாடல் சிந்திக்க. இருபாலும் - இரண்டு பக்கங்களிலும். தூங்கி – தொங்கி. இரட்ட - மாறி மாறியொலிக்க.

சொல்லாய பூவைச் சுவையாய தேனெழுகப்
புல்லா வழுவாய புல்லியெலாம் - இல்லாமற் 56

கற்று நிரம்பாக் கவியாங் கவிகளெலாம்
உற்று வருத்தா வுரவடையா - முற்றுமுணர் 57

ஆன்றோ ரெனச்சொ லளிக்கணங்கண் மொய்த்தளையச்
சான்றோர்சொ லன்பாந் தகுநாரால் - வான்றோயுஞ் 58

செந்நா வெனுங்கரத்தாற் சீர்தொடுத்து வாட்டமொன்று
மன்னு வகையமைபா மாலையான் - பன்னயமார் 59

சித்தாந்த சைவமொன்றே தேற்றமற் றுள்ளவெலாம்
பித்தாந்த மென்றெடுத்துப் பேசுதல்போல் - ஒத்தபல 60

வண்டாடு மாலையொடு மண்ணின்று வான்கிழித்துக்
கொண்டாடு காவிக் கொடியாளன் - தொண்டர் 61

கடியாத பேரொலியாய்க் கற்றோராற் சொல்லி
முடியாத நாத முரசான் - குடியாகுந் 62

தானமல ராளிமுன்னோர் தங்களைக்கொண் டைந்துதொழி
லானவைநன் காற்றுவிக்கு மாணையான் - ஞான 63

---

56. நான்கு சொல்லாய பூ - பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் ஆகிய நால்வகைச் சொல்லாகிய மலர். இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனினுமாம். வழு – குற்றம். புல்லி - புறஇதழ். புல்லா – பொருந்தாத. சுவை - ஒன்பான் சுவை.

58. அளிக்கணம் – வண்டினம். அளைய - அளவளாவ.

59. சீர் – சிறப்புக்கள்; புகழ். சொல் மலர், சுவை தேன், வழு புல்லி, ஆன்றோர் அளி, அன்பு நார், நா கரம்; பண்புத்தொகைகள். பாமாலை வாடாதது, பூமாலை வாடும். 'பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப் பத்திபடப் பரப்பித்திக்கு, முழுதகன்று மணந்துசுவை யொழுகி யணி பெற முக்கண் மூர்த்தி தாளில், தொழுதகன்ற அன்பெனு நார் தொடுத்தலங்கல் சூட்டவரிச் சுரும்புந்தேனும், கொழுதகன்ற வெண் டோட்டு முண்டகத்தாள் அடிமுடிமேற்கொண்டு வாழ்வாம்' (பரஞ்சோதி திருவிளையாடல் - கடவுள் - 12). உருவகவணி. பல் நயம் ஆர்.

60. சித்தாந்தம் - முடிந்தமுடிபு. பித்த அந்தம். 117-ஆம் கண்ணி காண்க. ஐக்கியவாதசைவம் முதலாகப் பலவுள ஆகலின் சித்தாந்த சைவம் என்றார்.

62. கடியாத – நீங்காத.

63. குடியாகும் தானம் - இருப்பிடம். மலராளி – பிரமன். முன்னோர் - முதலியோர்; என்றது பிரமன், மால், உருத்திரன், மகேசுரன,

வரமணிய வாவினரே வாஞ்சித் திடுஞ்சுப்
பிரமணிய தேசிகனெம் பெம்மான் - உரமார் 64

ஒருநமச்சி வாய னுயர்நமச்சி வாயன்
குருநமச்சி வாயனெங் கோமான் - அருள்சால் 65

மகர மதியின் வயங்குமுத ஞளில்
நிகரிலபி டேகமுத னீடும் - புகரிலா 66

ஆரா தனங்கொண் டருளிமறு நாட்பகலில்
ஏரா ரடியவரெண் ணில்லாரோ(டு) - ஒருமமு(து) 67

உண்டுளார் யோகசித்தி யுற்றுளார் ஞானசித்தி
கண்டுளா ராவரெனக் கைகுவித்து - மண்டிவரும் 68

ஆன்றவடி யாரோ டறுசுவை யாரமுது
தோன்ற வினிதுகை தொட்டருளிச் - சான்றவருள் 69

நூலே யினிது நுனித்தமதி யார்க்குப்பின்
வேலே முழுதும் விரித்தருளி - மாலேவர 70

மாமுனிவர் தூய்மை மருவுநறு நீராட்டி
ஏமுறுமெய் யொற்ருடை யிட்டதற்பின் - காமன்வலி 71

வென்றதிறங் காட்டி விளங்குறுகற் ருேயாடை
ஒன்ற வரையி லுடுத்தருளி - நன்றமையும் 72

ஆதனத்து மேவி யருகமரும் வட்டகையின்
மாதனத்தி ஞலும் வயங்குவ்தாய் - மோதும் 73

---

சதாசிவன் என்பவர்களே. ஐந்துதொழில் – படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல்கள். தானமாகிய மலர் என்க. ஆணை - ஆஞ்ஞை.

64. வரம் மணி அவாவினரே: வரம் - சிரேட்டம். வாஞ்சித்திடும் - விரும்பும். உரம் - ஞானம்.

66. மகரமதியின் வயங்கும் முதல்நாள் - தைமாதத்து அசுபதி நாண்மீன்; இதனை 'மகரத்தலைநாள்' என்பர். புகர் இலா – குற்றம் இல்லாத.

68. ஒரும் அமுது உண்டுளார்; அமுதுண்டுளார் - தேவர். மண்டி வரும் – நிறைந்து வருகின்ற.

69. ஆன்ற - அறிவிற்சிறந்த. கைதொட்டு – நிவேதனம்செய்து.

70. சான்ற அருள்நூலே: அருள்நூல் - சிவாகமங்களும் அதன்வழி வந்த மெய்கண்ட சாத்திரங்களும்.

72. கல் தோய் ஆடை – கல்லாடை.

73. மா தனத்தின் - சிறந்த செல்வத்தினும்; விபூதி.

பசுமலநீ ருக்கியுயர் பண்பே யருளப்
பசுமலநீ ருக்கியமை பண்பாய் - வசுவின் 74

அடுத்தவையெல் லாம்புனித மாக்குதிரு வெண்ணீ(று)
எடுத்தவைய வங்குலவ வேற்றி - விடுத்தசுடர் 75

ஒன்பான் மணியு மொளிர்தருசிந் தாமணியும்
வன்பார் கவுத்துவ மாமணியும் - அன்பில் 76

ஒருதிரண மாக்கு முருத்திராக் கங்கள்
பொருவில் சிரமுதலாப் பூண்டு - கருதும் 77

இருவ ரழுக்கறுப்ப வேற்றசடா மோலி
இருவரிரு கைகொடுப்ப தேற்றே - ஒருவரினி 78

தெங்கண் மணிமோலி யென்னவொளிர் பாதுகைமற்(று)
அங்கணெதிர் வைப்ப வவற்றிவர்ந்து - துங்க 79

முரசு முழவ முருடு திமிலை
பரசு தடாரி படகம் - விரசு 80

பலவு மெழுந்து பரம்பி முழங்க
நிலவு பிறவு நிகழக் - குலவு 81

திருவா வடுதுறைவாழ் செல்வன்வந்தா னெம்முள்
ஒருவா வொருவன்வந்தா னுற்றோர் - மருவு 82

பிறப்புமுழு தொழிக்கும் பேராளன் வந்தான்
சிறப்பருள் செம்மல்வந்தான் றிண்பார் - உறப்புகுந்த 83

---

74. பசுமலம் நீறு ஆக்கி - கோமயத்தை நெருப்பிலிட்டு விதிப்படி விபூதியாகச் செய்து. பசுமலம் – ஆன்மாவின்மாட்டுள்ள குற்றங்கள்; அவை ஆணவம் முதலியன. வசுவின் - நீரின்; இன்: உவமஉருபு.

75. அவையவம் - அவயவம், உறுப்புக்கள்.

76. ஒன்பான்மணி – நவமணிகள்.

77. திரணம் - புல். பொரு இல் - ஒப்பில்லாத.

78. இருவர் - பிரம விஷ்ணுக்கள். அழுக்கறுப்ப - பொறாமை கொள்ள.

79. மணிமோலி – இரத்தினகிரீடம். இவர்ந்து - ஏறிச்சென்று.

80. வாத்திய விசேடங்கள்.

82. இது முதல் 87 வரை திருச்சின்ன ஒலிகள் கூறப்படுகின்றன. எம் உள் ஒருவா ஒருவன் – எமது மனத்தில் நீங்காத ஒப்பற்றவன். உற்றோர் – அடைந்தோர்.

துங்க மலிஞான சூரியன்வந் தானுயிரின்
பங்க மறுக்கும் பரன்வந்தான் - எங்கள் 84

குருசாமி வந்தான் குணக்குன்று வந்தான்
அருண்ஞான மூர்த்திவந்தா னன்பர் - பெருவாழ்வாம் 85

தம்பிரான் வந்தான் றழைசுப் பிரமணிய
நம்பிரான் வந்தா னலமாரும் - எம்பிரான் 86

வந்தான்வந் தானென்று மாண்பார் திருச்சின்னம்
நந்தா வொலியெழுப்பி நன்குவர - முந்தா 87

தரம்பெருக வாலவட்டந் தாலவட்டம் பற்றி
வரம்பெருக வோர்பான் மலிய - நிரம்பு 88

முழுமதிய மேலமர்வான் முந்திமுயன் றென்ன
எழுகவிகை செய்யுநிழ லேய்ப்பத் - தழுவு 89

பெரும்புகழ்வெவ் வேருய்ப் பெயர்ந்து பெயர்ந்து
விரும்பலுறத் துள்ளும் விதம்போல் - அரும்பு 90

பவளக்காற் சாமரைகள் பற்பலவு மொய்த்துத்
திவளத் தலைபனிப்புச் செய்ய - இவளவெனுக் 91

கோணுத தண்டமொடு கோணலுறு தண்டமும்
நாணுளு நீங்கா நலங்காட்டப் - பேண 92

அலர்மகர தோரணங்க ளாயு மொலியல்
பலவு நெருங்கிப் பரம்பக் - குலவுதிறல் 93

ஓதுவார் பல்லோ ரொருங்குதே வாரங்கள்
ஓதுவா ராய்த்தாள மொத்தலொடு - போதவெளி 94

---

84. துங்கம் மலி – பரிசுத்தம் நிறைந்த. பங்கம் - குற்றம்.

86. தம்பிரான் - தாமே தமக்குப் பிரானுக உள்ளோன். சுப்பிரமணிய நம்பிரான் – பாட்டுடைத்தலைவராகிய ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்.

87. நந்தா – கெடாத.

88. முந்து ஆதரம் பெருக. ஆலவட்டம் - விசிறி. தாலவட்டம் - பனையோலையால் வட்டவடிவாகச் செய்யப்பெற்ற விசிறி; தாலம் - பனை.

90. புகழ் - வெண்ணிறம்.

91. மொய்த்துத்திவள - நெருங்கிப் பொருந்த. பனிப்பு – நடுக்கம்; அசைவு.

92. கோணல் உறுதண்டம் – வளைதடி.

93. மகரதோரணம் - இது மகரிகை என்று கூறப்படும். ஒலியல் - ஈயோட்டி.

வந்து மணிச்சிவிகை வாயோர் களங்கமிலா
இந்துநிறைந் தென்ன வெழுந்தருளி - முந்து 95

மனைதுறந்தார் செஞ்சடிலம் வைத்தாரஃ தின்றி
நினையு மழித்தலுற்ற நீரார் - புனையுமரைக் 96

கீளொடு கோவணத்தார் கேடில்கர பாத்திரத்தார்
ஆளொடுவாழ் வாமில் லறத்தமர்ந்தார் - நாளுஞ் 97

சரியை கிரியை தவயோக ஞானம்
விரியவனுட் டிக்கும் விருப்பார் - தெரிய 98

உலகம் பழியா துறுவேடம் பூண்டார்
உலகம் பழிக்க வுவப்பார் - இலகு 99

திரிபுண் டரத்தார் திகழ்கண் மணியார்
விரிதரவுத் தூளனமே மேயார் - பரியும் 100

அரனடியார் தொண்டி னமைந்தா ரளவாச்
சுரர்புகழ்கோ யிற்பணியே சூழ்வார் - விரவும் 101

அடியாருக் கன்னமுத லாதரித்து நல்கு
நெடியார் தியான நிறைந்தார் - கடியார் 102

மலர்தொடுப்பார் தீபம் வயக்குவார் மற்றும்
பலர்புகழுஞ் சாத்திரங்கள் பார்ப்பார் - நிலவுபொருள் 103

ஆய்வார் வினவுவா ரங்கைகொட்டி நட்டமிட்டுத்
தோய்வாரா னந்தத் தொடுகடலில் - வாய்வார் 104

துதியா ரயன்முதலாச் சொல்லும் பிறரை
மதியா ரருளே மதிப்பார் - கதியார் 105

இவர்மு னனைவோரு மேத்திக்கை கூப்பிக்
கவரடையா நெஞ்சங் கரைந்து - சிவனென்று 106

ஆர்ப்பாரோர் சில்லோ ரரகரவென் றானந்தம்
போர்ப்பாரோர் சில்லோர் புடைநெருங்க - ஏர்ச்சிவிகை 107

---

95. இந்து - சந்திரன்.

96. செஞ்சடிலம் – சிவந்தசடை. மழித்தல் உற்ற நீரார் – முண்டிதமான தலையுடையார். 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' என்னும் குறளுரையில் பரிமேலழகர் 'மழித்தலென்பதே தலைமயிரை யுணர்த்தலின் அது கூறாராயினர்' என்றார்.

98. தவயோக ஞானம் - மிக்கயோகமும் ஞானமும். 'தவ' உரிச்சொல்: மிகுதிபற்றியது.

106. கவர் - கப்பு, கிளை, பிளவு.

செம்மையுறு காட்சிச் சிவிகை கொடுத்தடைந்தார்
தம்மை யியக்குவார் தாங்கிவர - வெம்மைக் 108

கதிர்பன் னிருகோடி காணவெளிப் பட்ட
முதிர்விற் பெருந்தீப மொய்ப்ப - அதிர்சிலம்பிற் 109

பொன்னங்கொம் பன்னுர் புகுந்துநீ ராசனஞ்செய்(து)
அன்னம் பெயர்ந்தாங் கயலொ துங்க - முன்னம் 110

விரைமலர்கள் சிந்தி விரைச்சாந்தம் வாரிப்
புரையறப்பெய் வாரும் பொலிய - உரைசிறந்த 111

மெய்கண்டான் சந்ததிக்கு மேன்மேல் விளக்கமுறப்
பெய்கண்டா னுய பெருமானே! - வையம் 112

புகழ வருங்குரவர் போரேறே! ஞானந்
திகழ வவதரித்த தேவே! - இகழ்வில் 113

வரமணியே! எங்கள்பெரு வாழ்வே! அருட்சுப்
பிரமணிய தேசிகனே! பெட்பின் - உரமணிய 114

முன்னமே செய்தோ முயங்கு தவத்தையினி
என்ன குறையுடையோ மென்பாரும் - சொன்னகதிர் 115

முன்னமிரு ணின்ருலு முற்று முணர்ந்தோய்நின்
முன்னமிரு ணில்லாது முற்றுமென்பார் - நன்னயமார் 116

சித்தாந்த சைவமன்றிச் சேரமற் றுள்ளவெல்லாம்
பித்தாந்த மேலும் பிறப்பென்பார் - இத்தரணி 117

பெற்றபே றுண்டோ பெருவானி னீபயிலல்
உற்றநா ளாதி யுரையென்பார் - கற்ற 118

---

109. வெம்மைக் கதிர் பன்னிருகோடி - வெப்பத்தையுடைய பன்னிரண்டு கோடி சூரியர்.

110. அன்னம் பெயர்ந்தாங்கு - அன்னப்பறவைகள் பெயர்ந்து சென்ருற்போல. நீராசனம் - ஆலத்திசுற்றல்.

112. பெய் கண் தான் ஆய.

114. 64-ஆம் கண்ணி பார்க்க. உரம் அணிய - ஞானத்தையடைய.

116. கதிர் முன்னம் இருள் நின்ருலும் – சூரியன் எதிரிலே இருட்டு நிலேத்திருப்பினும். நின் முன்னம் இருள் நில்லாது: இருள் - அஞ்ஞானம்; அகவிருள். முன்னே கூறியது பூதவிருளாகிய புறவிருளை என்க.

117. சித்தாந்தம், பித்தாந்தம்; 60-ஆம் கண்ணி. தரணி – பூமி; நிலவுலகம்.

குருமணிநீ யாரையுமாட் கொண்டு புரக்க
வருமணியோ வென்று வகுப்பார் - பெருகொளிசால் 119

விண்மணியே ஞான விளக்கே யடியேங்கள்
கண்மணியே யென்று கரைதருவார் - எண்ணுமுழு 120

மாயப் பெருஞ்சாரு வாகன்முத லோருமருள்
ஏயப் பொலிவா ரினியென்பார் - தோயும் 121

பகுதி யளவே பகரைந் திரவோர்
தகுதிவெண்ணீ றென்றணியச் சார்ந்தார் - மிகுதி 122

உனியா மெடுத்திங் குரைப்பதெவ னெல்லாம்
இனிமாறில் சைவமே யென்பார் - நனிபுரியும் 123

வேலையொழிந் தான்பிரமன் வெய்ய நரகிலிடும்
வேலையொழிந் தானியமன் மேன்மேலும் - சாலவருள் 124

வீசி யனைத்துயிர்க்கு மெய்ச்சுப் பிரமணிய
தேசிகன் செய்யுந் திறத்தென்பார் - மாசில் 125

திருவா வடுதுறையே திக்கனைத்தும் போற்றப்
பொருவாத தென்று புகல்வார் - அருள்சான்மா 126

சில்லா மணியேமற் றிச்சுப் பிரமணியீ
தல்லா துரைப்பதுள தாங்கொலென்பார் - வல்லபிரான் 127

---

**121.** சாருவாகன் முதலோரும் அருள் ஏயப் பொலிவார். சாரு வாகன் – புத்தன். மாயச் சாருவாகன் என்றது திருமால் பௌத்தாவ தாரங்கருதி.

**122.** பகுதி அளவே பகர் ஐந்து இரவோர் – மூலப்பிரகிருதி வரை யிலே தத்துவங்கொள்ளும் பாஞ்சராத்திரிகள். 'பஞ்சராத்திரியில் நூல் செய்கையால் பாஞ்சராத்திரி என்று பெயராயிற்று' என்பர் திருவொற்றி யூர்த் தத்துவப்பிரகாசர் தமதுரையில்.

**123.** உனி - உன்னி: தொகுத்தல். எவன்: வினாவினைக் குறிப்பு. 'பராவணமாவது நீறு' எனவும், 'தக்கோர் அணிவது நீறு' எனவும் அருளிச்செய்தமை காண்க. எல்லாம் இனி மாறுஇல் சைவமே என்பது 'நிற்பனவும் சரிப்பனவும்' சைவமே என்பது பெறப்படும்.

**125.** பிரமன் வேலையொழிதலாவது படைக்கும் தொழில் இல்லாமை. இயமன் வேலையொழிதல் இறக்கும் நிலையில் ஆன்மாக்கள் இல்லாமை. எனவே, ஆன்மாக்கள் இறத்தல் பிறத்தல் தொழில்களினின்று நீங்கி முத்தி யெய்துதலின் என்க.

**126.** பொருவாதது – ஒப்பில்லாதது; பொரு - ஒப்பு. ''மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும்போலும்'' தேவாரம்.

**127.** அருள் சால் மாசு இல்லாமணி. இச்சுப்பிரமணியே மாசு

நெற்றிக்க ணீத்தமரு நேய மெவனென்பார்
பற்றிக் கரும்புகொடு பையவந்து - முற்றி 128

ஒருவே ளுடற்ருமை யோர்ந்தென்பா ரம்மை
இருவாள் விழியுமிரு கையாற் - பெருகப் 129

புதையாமை தேர்ந்தென்பார் பொங்குதலை மாலை
யதையே யணிந்ததென்பா ராவா - கதைமாலும் 130

பங்கயனு முன்போற் பரனும் பரனுமென்
சங்கையடை யாமையாற் றனென்பார் - பொங்கு 131

மதியொழித்த தென்னென்பார் மாசிலா ருக்கே
கதியருளற் கென்று கரைவார் - பொதியும் 132

இதழிமணந் தோளிலுரு தென்னென்பார் செவ்வா
யதுகமழ்த லாலென் றறைவார் - முதுமானென்(று) 133

ஓட்டிவிட்ட தென்னென்பா ரோட்டிவிடா னேலுயிர்கள்
வீட்டி லுறலெவ் விதமென்பார் - ஈட்டமுறு 134

---

இல்லாமணி என்ருர். மாசிலாமணி என்பது இத்தலத்துச் சிவபெருமான் திருநாமம். சிவபெருமானே சுப்பிரமணியதேசிகனுகக் குருவடிவத்தி லெழுந்தருளியுள்ளார். 'குருவே சிவமெனக் கூறினன் நந்தி' திருமந்திரம். 'தம்முதல் குருவுமாய்' சிவஞானபோதம்.

128. மானிடச் சட்டைசாத்தி வருதலின் நெற்றிக்கண் நீத்து அமர்ந்தார். கரும்பு - கரும்பாகிய வில். முற்றி - முற்றுகைசெய்து.

129. ஒருவேள் என்றது மன்மதனை. உடற்ருமை – வருத்தாமையை. வாள் விழி – ஒளிபொருந்திய கண்கள். வாள் என்றது ஒளியினைச்செய்யும் சூரிய சந்திரரை; ஆகுபெயர்.

130. தலைமாலை - பிரமவிட்டுணுக்களுடைய சிரமாலைகள். திருமுடி யிலே பிரமதேவர் தலைமாலையையும், திருவடியிலே திருமாலின் தலைகளா லாகிய கிண்கிணியையும் சிவபிரான் அணிந்துள்ளார் என்பது வரலாறு. 'வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிர மாலையாகக், கொள்ளு வது மலர்மடந்தை கொழுநர்தலை கிண்கிணியாக் கோத்துச் சாத்த, உள்ளுவதும்' என்பது ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் வாக்கு.

131. என் - என்றுசொல்லும். சங்கை - ஐயப்பாடு.

132. மதியின்கண் மறு உளதாகலின். மாசு இலாருக்கே - குற்ற மில்லாத ஆன்மாக்களுக்கே. மாசு என்றது இங்கே ஆணவம். கதி – முத்திப்பேறு.

133. இதழி மணம் – கொன்றைப்பூ மாலையினது வாசனை. இதழ் - உதடு. சிவந்த வாயினிடத்து அந்த இதழ் பொருந்துதலால். செவ்வாய் - சிவந்த வாய். அது என்றது ஆதழை. இதழி மணம், செவ்வாய் அது

மாசடையா னென்னும் வழக்கிலையென் பாரென்று
மாசடையா னென்னல் வழக்கென்பார் - பேசுமொரு 135

தோகையிடப் பாலனெனச் சொல்லாமென் பாரரைசூழ்
தோகையிடப் பாலனெனச் சொல்லுமென்பார் - வாகை 136

பரசுகைக்கொள் ளாத படியெவனென் பார்நம்
பரசுகைக்கொள் ளும்பரனே யென்பார் - விரசு 137

மருள்விடங்கண் டங்கழித்த வாறென்னே வென்பார்
அருளமுதங் காணென் றறைவார் - தெருளும் 138

அடிநிலந் தோய்குவதென் னுமென்பார் தோயா
விடினியமன் றண்டநம் மெய்யின் - முடியப் 139

படுமே யஃதுணர்ந்து பாரீரோ வென்பார்
இடுமாறு சென்னிவைம்மி னென்பார் - வடுவரியன் 140

என்பதெவ னென்பார்மெய் யேகம ருள்ளிருந்(து)
அன்பி னமுதுசெய்த தாலென்பார் - இன்பமிகும் 141

---

* கமழ்தலால் என்றது நயம். முதுமான் - பழமையாகிய பிரகிருதிமாயை. முதிய மான் என்பது வேறு பொருள்.

135. ஈட்டம் உறு மாசு - தொகுதியாகப் பொருந்திய குற்றம்; என்றது ஆணவம் கன்மம் மாயைகளை. மா சடையான் - பெருமைதங்கிய சடையினையுடையான்.

136. ஒரு தோகை - ஒப்பற்ற மயில்போலும் சாயலினையுடைய உமாதேவியார். இடப் பாலன் - இடது பக்கத்திலுடையவன். சொல்லாம் - சொல்லமாட்டேம். வாகை - வெற்றிக்குரிய அடையாளப்பூமாலை.

137. பரசு - ஆயுதம். நம் பரசுகைக் கொள்ளும் - நம் பரசுதலை ஏற்றுக்கொள்ளும். கை: தொழிற்பெயர் விகுதி.

138. விரசும் மருள் விடம் - பொருந்திய மயக்கத்தைத்தரும் நஞ்சு; என்றது ஆலகாலவிடத்தை. கண்டம் - கழுத்து. அருளாகிய அமுதம்என்க. கண்டங்கறுத்தார் அதனைக்கழித்தது மானிடச் சட்டை சாத்தியதாலாம்.

139. தெய்வங்கட்கு அடிநிலந்தோயா. தண்டம் - தண்டாயுதம்: நம் மெய்யில் முடியப்படும்.

141. வடு - குற்றம், மாவடு. கமருள் இருந்து அன்பின் அமுது செய்தது. கமர் - வெடிப்பு. அரிவாட்டாயநாயனர் சிவபெருமானுக்கு அமுதுசெய்வித்தற்குச் செங்கீரை, மாவடு, அரிசி இவற்றைக்கொண்டு செல்லும்போது தடுமாறிக் கமரில் சிந்திவிடக்கண்டு மனம் பொறுதவராய் அமுதுசெய்யாவிடில் இப்பொழுதே கழுத்தை அரிந்துகொள்ளுவேன் என அரிவாளைப் பூட்டி ஊட்டிவ்வரை அரிந்துகொள்ளச் சிவபெருமான் கமரில் வெளிப்பட்டுத் தமது திருக்கரத்தால் நாயனர் கையைப்பற்றித் தடுத்தார்

இந்தவிதம் யாரு மியம்பித் துதித்துவரப்
பந்த மகற்றும் பவனிவந்தான் - அந்தப் 142

பொழுதொருநன் னெஞ்சமே போதுவா ரோடு
தொழுதுவரு மாறு துணிந்தே - எழுதுமெழில் 143

வீதியிடைப் போந்தேன் விசயன் குனிசிலையான்
மோதி யிடுவதுள முன்னுனைய் - ஓதிப் 144

பனிமலர்கள் சாத்தியிரு பங்கயக்கை கூப்பி
முனிவுதவிர்ந் தேத்து முடியும் - கனியும் 145

நெருப்பைக் கரந்திருந்து நீறுகர வாது
விருப்பைச்செய் கின்ற விதத்தால் - ஒருப்படு 146

காரணத்தைக் காட்டாது காரியத்தைக் காட்டுமெனத்
தாரணியோ ரோதத் தகுநுதலும் - வார்புனற்பூ 147

ஒன்றை மலர்த்துபுமற் றொன்றைக் குவித்தல்செயா(து)
என்று மலர்த்து மிருவிழியும் - நன்றுமையாள் 148

---

என்பது வரலாறு. இதனை 'செய்யில் உகுத்த திருப்படி மாற்றதனை, ஐய இதுவமுது செய்யெனவே - பையவிருந், தூட்டி அறுப்பதற்கே ஊட்டி அறுத்தவரை, நாட்டியுரை செய்வதே நாம்' என்னும் திருக்களிற்றுப் படியார் செய்யுளான் உணரக்கிடக்கின்றது.

142. பந்தம் – பாசக்கட்டு. பவனி – திருவுலா.

143. நெஞ்சமே: விளி. இதுமுதல் நெஞ்சைவிளித்துத் தூதாக விடுதற்கு ஒருப்படுதல் கூறப்படும்.

144. விசயன் - அருச்சுனன். குனிசிலை – வளைந்தவில். குனிசிலையான் மோதியது, பாசுபதம் பெறவேண்டி அருச்சுனன் தவநிலையிலிருக்கும்போது துரியோதனன் ஏவலால் மூகாசுரன் என்பவன் கொல்லநினைந்து வந்த காலத்திலே சிவபெருமான் வேட்டுவவுருக்கொண்டு சென்று பன்றியைச் கொன்று அருச்சுனனுடன் போர்தொடுத்து வில்நாணியை அறுக்க அவன் கோபம்கொண்டு வில்லால் அடித்தான் என்பது வரலாறு. ''மீண்டொரு வன், வையானே வின்முறிய மாட்டானே'' காளமேகப்புலவர். உளம் முன்னுனைய் - மனத்தில் கருதாதவனைய். முன்னுதல் - கருதுதல்.

145 முதல் 162-வரை முடிமுதல் அடிவரையுள்ள வருணனைப்பகுதி.

147. காரணம் நெருப்பு, காரியம் நீறு எனக் கொள்க. தாரணி - பூமி. நுதல் - நெற்றி. நெற்றிக்கண்ணுகிய நெருப்பைக்காட்டாமல் நீறு பூத்து ஒளிர்வதென்றூர்: நீற்றினை நிறையப்பூசிய நெற்றி என்பது. புண்டரம் பூத்த நுதல் எனினும் ஆம். புனல் – நீர்.

148. புனற்பூ ஒன்றை மலர்த்தல் - சூரியன் தாமரைமலரை மலர்த்தல். ஒன்றைக் குவித்தல் என்றது குவளை அல்லி மலர்களைக் குவியச் செய்தல். சூரியனல் தாமரை மலர்வதும் ஆம்பல் குவிவதும், சந்திரனல்

கூந்தன் மணத்தினொடு கொள்ளா தடியரன்பாஞ்
சாந்த மணங்கொ டனிமுக்கும் - போந்தோர் 149

இயற்பகையார் பான்மனையை யீதியெமக் கென்ற
தயர்த்ததிரு வாயு மமையப் - பெயர்த்துமிழும் 150

வேடரெச்சி லூனடங்க மெல்லுந் திறந்தீர்ந்தும்
வாடலற்றுத் தோன்று மணிநகையும் - கூடுபுரம் 151

மூன்று மவிய முகிழ்க்குந் திறமயர்த்துத்
தோன்றுஞ் சிரிப்பும் துணிபமைய - ஆன்ற 152

ஒருத்தி பதிந்த வுகிர்க்குறிகாட் டாது
திருத்தியக போலமுமான் சீறிப் - பொருத்தும் 153

பரவொலி யேலாது பற்று வடியேம்
பரவொலியேற் குஞ்செவியும் பண்டே - விரவுறுமை 154

வண்ண வடிவொழித்து வாட்டந் தவிர்த்தருளோர்
வண்ணவடி வோடமரு மாமுகமும் - பண்ணமையும் 155

பூணின்ப லொத்ததெனப் போற்றற்கிடங்கொடா(து)
ஏணி னமைந்த வெழிற்கழுத்தும் - நாணின்றி 156

யேமாலை யென்ன வெலும்பணியா தெங்கள்வாய்ப்
பாமாலை சூடும் பணைத்தோளும் - காமருமால் 157

---

ஆம்பல் மலர்வதும் தாமரை குவிவதும் செய்யும். சிவபெருமான் கண்களாகிய சூரிய சந்திரர் அங்ஙனம் செய்யாமையால் என்றும் அலர்த்தும் என்றார்.

149. அன்பைச் சாந்தம் என உருவகிக்கப்பட்டது.

150. போந்து ஓர் இயற்பகையார். ஈதி - கொடுப்பாயாக.

151. வேடர் - கண்ணப்பநாயனர். அடங்க - முழுவதும். வாடல் அற்று.

152. புரம் மூன்று - திரிபுரம். முகிழ்க்கும் - தோன்றும்.

153. ஆன்ற ஒருத்தி - பொன்னனையார். உகிர்க்குறி - நகத்தால் உண்டாகிய தழும்பு. கபோலம் - கன்னம். மான் சீறிப் பொருத்தும் பரவொலி.

154. அடியேம் பரவு ஒலி.

155. ஐவண்ண வடிவு - சாதாக்கியதத்துவத்தில் உள்ள சதாசிவ மூர்த்தி நாயனரின் ஐந்து திருமுகங்களில் ஈசானம் பளிங்குநிறமும், தற்புருடம் கோங்கலர்நிறமும், அகோரம் கருநிறமும், வாமதேவம் பவள நிறமும், சத்தியோசாதம் சந்திரனைப்போன்றநிறமும் பொருந்துவன.

கண்காணி ஞணுக் கலங்கொள்விர லுண்மைநிலை
எண்காணக் கொண்ட வெழிற்கரமும் - மண்காண் 158

ஒருகுறியு மில்லென் றிருகுறி யுற்று
வருதிறங்காட் டாதவகன் மார்பும் - ஒருவர் 159

மழவையரிந் தூட்டவெழும் வன்பசி தோற்று
அழகின் வயிறு மமையப் - பழகதளும் 160

திக்கும் பிணங்கத் திகழுங்கற் றோயாடை
நக்கு விளங்கு நலத்தரையும் - பக்குமலம் 161

விண்டொழியக் கூற்றுவன்போல் வெவ்வா ளரக்கன்போல்
தண்டுதல்செய் தோவாத் தளிரடியும் - கண்டுநனி 162

ஆசைப்பட் டேனெஞ்சே யந்தோவக் காரணத்தால்
ஆசைப்பட் டேனெனநா ணுயினேன் -தேசுறமுன் 163

அன்னங்கா ணுனக்கண் டாரா மயக்கம்பூண்(டு)
அன்னங்கா ணுதவளே யாயினேன் - முன்னமொரு 164

கோலங்கா ணுனைக் குறுகியிரு கைதொழுது
கோலங்கா ணுமை குறுகினேன் - சால 165

வளையாழி மாற்கீந்த வள்ளலைக் கண்டு
வளையாழி தோற்றுமனை வந்தேன் - விளையுமொரு 166

---

158. மால் கண் - தாமரை. கலம் கொள் விரல் - மோதிரம் என்னும் அணியையணிந்த விரல். உண்மைநிலை - தத்துவநிலை; அஃதாவது சின்முத்திரை. எண் காண - மனத்தால் சிந்திக்க.

159. நிலவுலகிற்காணும் எவ்வகைப்பட்ட அடையாளமும். இருகுறி என்றது உமாதேவியாரின் முலைச்சுவட்டை.

160. மழவை அரிந்தூட்டியது சிறுத்தொண்டநாயனுர். பழகு அதளும் - பழகிய தோலாடையும். திக்கும் - திகம்பரமும். பிணங்க - மாறுபட.

161. கல் தோய் ஆடை - கல்லாடை; - காவியுடை. நலத்து அரையும்.

162. வெவ் அரக்கன் - கொடிய இராவணன். ஓவா - நீங்காத.

163. ஆசு ஐ - குற்றத்தை. ஐ: இரண்டனுருபு.

164. அன்னம் காணுன் - பிரமதேவராகிய அன்னப்புள்ளால் காணப்பெருதவர். அன்னம் - சோறு.

165. கோலம் காணுனை - திருமாலாகிய பன்றியால் காணப்பெரு தவர். கோலம் - பன்றி, அழகு.

166. வளை ஆழி மாற்கு ஈந்த - சங்கு சக்கரங்களைத் திருமாலுக்கு அருளிய. வளையலையும் மோதிரத்தையும். வளை ஆழி: உம்மைத்தொகை.

தாய்வெறுக்கப் பட்ட தகையானைக் கண்டடைந்து
தாய்வெறுக்கப் பட்ட தகையானேன் - ஆயுந் 167

தனியானைக் கண்டு தனியாயி னேனென்
துனிதீர நெஞ்சே சொலக்கேள் - முனியாமல் 168

முன்னு மவனை முயங்கும்வகை நீபுரிவாய்
மன்னுமுனைப் போன்றதுணை வாய்க்குமோ - பன்னுபல 169

வேதாக மங்கள் விதித்த விதியனைத்தும்
ஏதாகு நீயியைவ தில்லையெனின் - மீதாரும் 170

யோக மிருநான்கு முன்னை வயப்படுத்தற்
காக முயலுவன வல்லவோ - போகமுறு 171

தன்மைக்குஞ் செய்யுந் தவத்திற்குங் கற்றுணரு
நன்மைக்குங் கொள்ளுமொரு நட்பிற்கும் - வன்மைக்கும் 172

ஈகைக்கு மோர்த னியல்புணர்ந்து முத்திபுணர்
ஓகைக்கு நீயே யுறுதுணைகாண் - ஆகையுறும் 173

இல்லறத்தா ரைத்துறவி லேற்றுவிப்பாய் மெய்த்துறவா
நல்லறத்தா ரைக்கீழ் நணுகுவிப்பாய் - சொல்லும் 174

அறத்தைமற மாக வமைப்பாய் கொடிய
மறத்தையற மாக்குதற்கும் வல்லாய் - சிறப்பின் 175

ஒடுக்குதலே முத்தி யுனைப்பொறிவா யோட
விடுக்குதலே பந்தவினை மேலு - நடுக்குதலற்(று) 176

உன்னு லுயர்ந்தவரை யுன்னு லிழிந்தவரை
என்னு லளவிடுதற் கேயுமோ - பன்னுளும் 177

எம்மேனி யேனு மெடுத்தந்தி வானநிகர்
செம்மேனி யாளிவரச் செய்குவாய் - அம்மாநற் 178

---

167. தாயில்லான் என்றபடி. தாயால் வெறுக்கப்பட்ட தன்மை. தகை – தன்மை. 163–167 அடிமடக்கு.

168. தனியான் – ஒப்பற்றவன். தனி ஆயினேன் – தன்னந்தனி யானேன்; ஒன்றியானேன் என்றபடி. துனி – வருத்தம். முனியாமல் – கோபிக்காமல்.

169. முன்னும் அவனை – மனத்தாற் கருதும் அப்பரம்பொருளை. முயங்கும் - அணையும். மன்னும் – நிலைபெற்ற.

171. யோகம் இருநான்கு – அட்டாங்கயோகம்.

172–7. எச்செயலுக்கும் மனமே காரணம் எனக்குறித்தபடி.

178. எம்மேனியேனும் - எந்த உடம்பை எடுத்தாயினும். செம் மேனி யாளி – சிவந்த திருமேனியை யாள்பவனை.

றில்லைவா ழந்தணர்மா தேவ ஞெடுங்கலவ
ஒல்லை யுயர்ந்ததுவு முண்மைநெறி - வல்லபெருங் 179

கோளாளர் நீலகண்டர் கோதை யொருத்திபுகல்
சூளா லிளமை துறந்ததுவும் - வாளார் 180

இயற்பகையார் தம்மனையை யீயேனென் ஞது
மயற்பகையை நீத்துயர்ந்த வாறும் - அயர்ப்பின் 181

இளையான் குடிமாற ரெய்தி யிருளின்
முளைவாரி யன்னமிட்ட மொய்ம்பும் - கிளையோ(டு) 182

அமர்மெய்ப் பொருளா ரடாதந்தோ தத்தா
நமரென் றிடைவிலக்கு நண்பும் - சமர்செய்விறன் 183

மிண்ட ரடியாரை மேவாது போகியவன்
றெண்டர்புறம் பென்னச் சொலுந்துணிபும் - அண்டர்பிரான்

நேரேயோர் தட்டிலமர் நீதியார் பல்பொருளோ(டு)
ஆராய வேறி யமர்ந்ததுவும் - பாரா 185

எறிபத்தர் சீறி யிபமாதி மாய்த்து
மறிவற் றுயர்ந்தபெரு மாண்பும் - குறிபெற்ற 186

ஏனுதி நாத ரிரும்பகைவ னெற்றியினீ(று)
ஆனுமை கண்டுருகி யஞ்சியதும் - வானுர் 187

கலைமலிந்த கண்ணப்பர் கண்ணிடந் தப்பு
நிலைமலிந்து பெற்ற நிலையும் - உலைவில் 188

கலையர்மனை மங்கலப்பொன் கைக்கொடுநெற் கொள்ளார்
மலைவி றுணிபுற்ற மாண்பும் - நிலைவளங்கூர் 189

---

179. இதுமுதல் 241 வரை அறுபத்துமூன்று நாயன்மார் வரலாறு கூறப்படுகிறது. கலவ - கலக்க.

180. கோளாளர் - கொள்கையையுடையவர். சூள் - சபதம்.

181. மயற்பகை - மையலாகிய பகை. அயர்ப்பு இல்.

182. முளை - நெல்முளை; முளைத்தநெல்.

183. அடாது அந்தோ தத்தா நமர். இடை விலக்கும் - இடையிலே சொல்லால் தடைசெய்யும்.

184. அண்டர் பிரான் - சிவபெருமான்.

186. இபம் ஆதி - யானை முதலியவற்றை.

187. ஆனுமை - நீங்காதிருந்தமை.

189. மலைவு இல் துணிபு.

கஞ்சாறர் மாவிரதர் கையின் மகள்கூந்தல்
எஞ்சா தரிந்தெடுத் தீந்ததுவும் - வஞ்சவரி 190

வாள்கொண்டு தாயனூர் வண்கழுத்து வேருக்குங்
கோள்கொண்டு நின்ற குணச்செயலும் - தாள்கொண்ட 191

ஆனயர் கொன்றை யணிந்துருகி யஞ்செழுத்துந்
தானய வோசைசெவி சார்த்தியதும் - ஆனத 192

சீர்த்திபெறு மூன்றே சிறப்புத் தழீஇக்கொண்டு
மூர்த்தியுல காண்ட முறைமையும் - ஆர்த்தி 193

முருகர்திரு மாலையான் முன்னே னருளுக்(கு)
அருகரா யுற்ற வறனும் - பெருகிப் 194

பரவுருத்தி ரப்பேர்ப் பசுபதியார் நீரில்
விரவுதவஞ் செய்த விதமும் - உரவில் 195

திருநாளைப் போவார் திருத்தில்லை மன்றுள்
வருநாட்போய்ச் சேவித்த வாறும் - மருவு 196

திருக்குறிப்புத் தொண்டர் சிலாவணத்திற் சென்னி
விருப்பறமோ துற்ற விதமும் - கருப்பறிக்குந் 197

தண்டீசர் தந்தையிரு தாடுணிய வீசுமழுக்
கொண்டீசர் சார்பிற் குறுகியதும் - அண்டர்புகழ் 198

நாவரசு நீற்றறையு ணண்ணியிருந் தாலமுண்டு
மேவுகட னீந்திய வித்தகமும் - பாவு 199

குலச்சிறையார் யாரையுங்கை கூப்பிப் பணியும்
நலச்சிறைசார் புற்றசிவ நண்பும் - வலத்த 200

மிழலைக் குறும்பர் வியப்புறுமெண் சித்தி
அழகிற் பயின்ற வடைவும் - குழகமைந்த 201

மாதுருவ நீத்து வருகாரைக் காலம்மை
பேதுருவங் கொண்ட பெருங்கோளும் - தீதுதீர் 202

---

193. ஆனத சீர்த்தி பெறும் மூன்று; வேணி முடி, வேடம் அணி கலம், விரை நீறு. 'சீர்த்தி மிகுபுகழ்'. "வையம் முறைசெய் குவனுகில் வயங்கு நீறே, செய்யும் மபிடே கமுமாக செழுங்க லன்கள், ஐயன் அடையா ளமுமாக வணிந்து தாங்கும், மொய்ப்புன் சடைமா முடியே முடியாவ தென்றார்" மூர்த்திநாயனர் புரா: 41.

194. அருகராய் - தகுதியுடையவராய்.

201. பயின்ற அடைவு - இடைவிடாமற் செய்த முறைமை.

202. குழகு அமைந்த மாது உருவம் - இளமை பொருந்திய பெண் வடிவம்.

அப்பூதி யன்ப ரரசரடிக் கன்புசெய்து
செப்பூதி யங்கவர்ந்த சீர்மையும் - தப்பாத 203

நீலநக்கர் தம்மனையை நீத்திட் டரனருள்பெற்(று)
ஏலவழைத் தின்புற் றிருந்ததுவும் - சாலநமி 204

நந்தி யடிக ணகுகுளத்து நீர்மொண்டு
முந்தி விளக்கெரித்த மொய்வலியும் - சந்த 205

அருண்ஞான சம்பந்த ரங்கமா தாகத்
தெருண்ஞான வாய்மலர்ந்த சீரும் - பொருவில்கலிக் 206

காமர் வயிற்றிற் கருவி கொடுகுத்தி
ஏமவருள் பெற்ற விருந்திறனும் - பாமருவு 207

மூல ருடம்பொழிய மூவா யிரவருடங்
கோலவர சின்கீழ்க் குலாவியதும் - சாலவுயர் 208

தண்டி யடிக டவாக்குளத்தி னீர்முழுகி
அண்டி விழிபெற் றமர்திறனும் - தொண்டினியல் 209

மூர்க்கனுர் சூது முயன்ருடி மெய்யடியார்
யார்க்கு முவகை யருண்மாண்பும் - பார்க்குளுயர் 210

சோமாசி மாறர்வன் ருெண்டர்க்கே யாளாகித்
தாமாறி லின்பந் தகைந்ததுவும் - போமாறுென்(று) 211

இல்லாத சாக்கியனு ரெண்ணியெண்ணி நாடோறுங்
கல்லா லெறிந்து களித்ததுவும் - வல்ல 212

சிறப்புலியா ரன்புடையார்ச் சேர்ந்துபணிந் தேத்தி
மறப்பிலமு தாட்டும் வகையும் - மறப்பான்மை 213

விள்ளாச் சிறுத்தொண்டர் வேண்டு மகவரிந்து
தள்ளாக் கறிசமைத்த தன்மையும் - எள்ளா 214

---

203. செப்பு ஊதியம்.

206. அங்கம் மாது ஆக வாய் மலர்ந்தது - மயிலாப்பூரில் பூம்பாவைத் திருப்பதிகம் பாடிச் சிவநேசர் செல்வியை எழுப்பித்தந்தது.

207. பொரு இல் கலிக்காமர்.

208. கோல அரசின் கீழ் - அழகிய படரரசின்கீழ்; திருவாவடுதுறையில் தலவிருட்சம் படரரசு.

209. தவாக் குளத்தின் – நீங்காத கமலாலய தீர்த்தத்தில்.

214. மறப்பான்மை விள்ளா - வீரத்தன்மையை வெளிப்படுத்தாத: பாவததன்மையை எனினுமாம். வேண்டும் மகவு - வந்தவர் விரும்பிய பிள்ளையை.

அருளிற் கழறிற் றறிவார்மா வூர்ந்து
தெருளிற் கயிலைசென்ற சீரும் - மருளில் 215

கணநாத ரன்பிற் கரிசில்பணி யாற்றிக்
கணநாத ராய்ப்பொலிந்த கற்பும் - புணர்பெருமைக் 216

கூற்றுவனார் மோலியெனக் கொய்மலர்த்தாள் கூற்றினுக்கோர்
கூற்றுவனார் சூட்டக் குலவியதும் - தேற்றுபுகழ்ச் 217

சோழர் சடிலமுடி தோன்றக்கண் டாரழலின்
ஆழங் குளிர வமுந்தியதும் - வாழுநர 218

சிங்க முனையரையர் சேரவிகழ்ந் தாற்கிரட்டித்
தங்க மளித்த தவாப்புகழும் - துங்கவதி 219

பத்தர் வறுமை பரந்தகா லத்துமொரு
மித்தங் கொருமீன் விடுத்ததுவும் - ஒத்தகலிக் 220

கம்ப ரடிமை கலந்தடிய ரோடுவர
நம்புமனை கைதடிந்த நன்மையும் - வம்பில் 221

கலியர் விளக்கெரிக்குங் காட்சி குறையா(து)
ஒலிமிடற்று வாள்பூட் டுரவும் - வலியதிறற் 222

---

215. எள்ளா அருளில் - இகழாத அருளினையுடைய. கழறிற்றறி வார் - சேரமான்பெருமாள் நாயனார். மா ஊர்ந்து - குதிரையின்மேல் ஏறிச்சென்று. மருள் இல்.

216. கரிசு இல் பணி - குற்றமில்லாத திருத்தொண்டு.

217. மோலி – கிரீடம். கூற்றினுக்கோர் கூற்றுவனார் - காலகால ராகிய சிவபெருமான். கூற்று – இயமன்.

218. புகழ்ச்சோழநாயனார், சேனையிலுள்ளார் கொண்டுவந்த தலைக் குவையின் நடுவிலுள்ள ஒருதலையில் சடைதெரியக்கண்டு, சிவனடியாரென நடுங்கி, செந்தீ வளர்ப்பித்து, சடைச்சிரத்தினைக் கற்கள் பதித்த தட்டில் ஏந்திக்கொண்டு, அவ்வெரியில் மூழ்கினர் என்பது வரலாறு. சடிலம் - சடை. அழல் - நெருப்பு.

219. சேர இகழ்ந்தாற்கு - ஒருசேர அடியாரெல்லாம் தூர்த்தன் இவன் என இகழ்ந்து ஒதுங்கிய ஒருவனுக்கு; மேனியில் திருநீறு நிறையப் பூசியிருந்தபடி கண்டு இரட்டியாகப் பொன்கொடுத்து வழிபட்டார் என்பது வரலாறு.

220. ஒருமித்து - மனம் ஒருப்பட்டு.

221. அடிமை - முன்பு தம்மிடம் வேலைசெய்த ஆள். மனை - மனைவி. கை தடிந்த – கையைத் தறித்த.

சத்தியா ரீசர்கழல் சார்ந்தார் தமையிகழும்
புத்தியார் நாவரிதல் போற்றியதும் - எத்திசையுங் 223

கண்டேத்து மையடிகள் காடவர்கோன் வெண்பாவைக்
கொண்டேத்து மேன்மை குலவியதும் - பண்டுகணம் 224

புல்லர் விளக்கிட்டுப் போற்றுதற்கு முட்டுவர
நல்ல முடிகொளுத்து நன்மையும் - சொல்லவரு 225

காரியா ரெங்குங் கவிபாடி யண்ணலருள்
வாரியா ரப்பெற்ற வன்மையும் - மூரி 226

நெடுமாறர் நீறணிந்து நெல்வேலி வென்று
தடுமா றிலாதிருந்த சார்பும் - விடுமாறில் 227

வாயிலார் தூய மனக்கோயிற் பூசித்துத்
தாயிலார் பாதநிழல் சார்ந்ததுவும் - ஏயும் 228

முனையடுவார் மாற்றார் முனையடுசெம் பொன்னால்
வினையடுவா ராய விதமும் - வனைகழற் 229

சிங்கர் மனைவி திருமலர்கை தொட்டதென்று
பங்க மறத்தடிந்த பான்மையும் - துங்க 230

இடங்கழியார் சோரரென வெய்தினர் தம்மைத்
திடங்கழியா தோர்ந்துவிட்ட சீரும் - அடங்காச் 231

---

223. ஈசர் கழல் சார்ந்தார்தமை இகழும் புத்தியார் - சிவனடியாரை இகழும் புத்தியுடையார்.

224. ஐயடிகள் காடவர்கோன் நாயனர் அருளியது க்ஷேத்திரத் திருவெண்பா.

227. மூரி - வலிமை. நெடுமாறர் - நின்றசீர் நெடுமாறநாயனர். இவர் மங்கையர்க்கரசியாருடைய கணவர். திருநெல்வேலிப் போர்க்களத்தே வென்று சிறந்தார்.

228. தாயிலார் - சிவபெருமான். ''அம்மை தமக்கில்லாதார்'' தமிழ்விடுதூது - 174.

229. மாற்றார் முனை - பகையரசர் போர்முனை,

230. பட்டத்துத்தேவி திருவாரூர்ப் பூங்கோயிலில் வணங்கி வலம் வரும்போது கீழேகிடந்த மலரையெடுத்து மோந்ததனைக்கண்ட செருத்துணைநாயனர் அவள்மூக்கினை அரிய அதனைக்கேட்டுக் கழற்சிங்கர் தமது மனைவியின் கையன்றோ தொட்டெடுத்தது என்று கையினைத் துணித்தார் என்பது வரலாறு. பங்கம் அற - குற்றம் நீங்க.

231. சோரர் - கள்வர்.

செருத்துணையா ரோர்மன்னர் தேவியார் மூக்கின்
பொருத்துணையா தீர்ந்த புகழும் - திருத்து 232

புகழ்த்துணையா ரென்பார் புனித னருள
நிகழ்த்துமொவ்வோர் காசுபெற்ற நீரும் - இகழ்ச்சிதவிர் 233

கோட்புலியார் பாலுண் குழவுங்கூ டாதென்று
வாட்புலியார்க் கீந்த வளத்திறனும் - வேட்குமொரு 234

பூசலார் மிக்க பொருடேடி யாலயஞ்செய்(து)
ஏசலா ராதிருந்த வின்றிறனும் - ஆசகலு 235

நீற்றின் பெருமை நினைமங்கை யர்க்கரசி
போற்றி யமைந்த புகழ்ப்பேறும் - சாற்றரிய 236

நேசனு ரன்பர்பா னேசனுர் கோவணந்தந்(து)
ஈசனுர் பேரருண்மிக் கெய்தியதும் - பாசமகல் 237

செங்கட்சோ ழப்பெருமான் செம்பொற் றளிபலசெய்(து)
அங்கட்டீ ராவன் பமைந்ததுவும் - துங்கத் 238

திருநீல கண்டர் செழும்பலகை யேற
ஒருநீல கண்ட ருவப்பும் - பொருவில் 239

சடையரிசை ஞானியார் தாவாப் பெரும்பே(று)
அடைய வமைந்த வருளும் - விடையுடையார் 240

---

232. பொருத்து உள் நையாது ஈர்ந்த. ஈர்ந்த - அரிந்த.

233. புகழ்த்துணையார் - சிவமறையோர். ''அகத்தடிமைசெய்யும் அந்தணன் தான் அரிசிற் புனல்கொண் டுவந்தாட்டு கின்றான், மிகத்தளர் வெய்திக் குடத்தையு நும்முடி மேல் விழுத்திட்டு நடுங்குதலும், வகுத்தவ னுக்கு நித்தற் படியும் வருமென் றொருகாசி னைநின்ற நன்றிப், புகழ்த் துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே'' (சுந்தரர் தேவாரம் - அரிசிற்கரைத் தென்புத்தூர் - 6): இத்தலம் அழகார்புத்தூர் என வழங்கும்.

234. வாட்புலி – வாளாகிய புலி.

238. செம்பொற் றளி பல, தளி - கோயில். ''இருக்குமணிவா யெண்டோ ளீசற் கெழின்மாடம் எழுபதுசெய் துலக மாண்ட, திருக் குலத்து வளச்சோழன்'' திவ்வியப்பிரபந்தம். ''சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழற்பந்தர் செய்து, உலந்தவண் இறந்தபோதே கோச்செங்க ணனு மாகக், கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள், குலந்தனிற் பிறப்பித்திட்டார்'' என்பது திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

239. ஒரு நீலகண்டர் - ஒப்பற்ற நீலகண்டராகிய சிவபெருமான்.

240. விடையுடையார் - இடப வாகனத்தையுடைய சிவபெருமான். ஆணை – கயிலையில் 'ஊரானையும்பர் வெள்ளானையின் உடனேற்றிச் சென்று கொண்டிங்கு வாரும்' என்ற சிவாஞ்ஞை.

ஆணைமேற் றூங்கி யருணுவ லூரர்வெள்ளைக்
கோணை மதமாமேற் கொண்டதுவும் - வீணை 241

யுருநெஞ்சே மற்றனைத்து முன்னுலே யன்றே
மருநின்சீர் யாவர் வகுப்பார் - வெருதவருட் 242

டாயே யனையாய் தவறுறுமோ நங்கரும
நீயேதூ தாக நிகழுங்கான் - மாயமன்றே 243

முன்ன முயன்று முடிகா ணரிதாய
அன்ன முகமுன் னணையுமோ - முன்னமொரு 244

பச்சை மயிலையொரு பாலடக்கி பாங்கரின்றேர்
பச்சைமயில் சென்றுற் பயன்படுமோ - வச்சை 245

மதனைச் சுமத்தலினல் வாகையிலாக் கிள்ளை
இதனைச் செயற்குவலி யாதே - சுதமகல 246

அன்றுசடைக் காட்டி லடங்கிக் கிடக்குமுகில்
இன்று புரிவ தெதுகண்டாய் - துன்றுபொருட் 247

பாவை யடியர் பகரவேற் குஞ்செவிகள்
பூவை குழறுமொழி போற்றுமோ - பாவையெனுந் 248

தோழி யுரிமை துணிந்தனுப்பி னுற்றிருமுன்
வாழி யடைய வலியளோ - பாழிமதன் 249

---

241. கோணை – வலிமை.

242. வீண் ஐ உரு நெஞ்சே. நை உரு எனினும் ஆம். மருத நின் சீர்.

244. இதுமுதல் அன்னம், மயில், கிள்ளை, முகில், பூவை, தோழி, குயில், தென்றல் இவைகளைத் தூதாக அநுப்ப இயலாமைக்குக் காரணம் கூறப்படுகிறது. முன்னம் – முன்னொருகாலத்தில். காண அரிதாய: தொகுத்தல். அன்னம் - பிரமன் அன்னவுருப் பெற்றதை. முடியைக் காண அரிதாகிய அன்னம் முகத்தின்முன் அணையாது என்றபடி: நயம்.

245. பச்சை மயில் – உமாதேவியார். ஒருபால் - ஒருபக்கம்: இடப் பாகம். அடக்கி என்பது பெயர். பாங்கர் - பக்கத்திலே.

246. மதனை – மன்மதனை. வாகை இலா – வெற்றியில்லாத. வலி யாது – பொருந்தாது: வன்மை எவ்வாறுண்டாம் எனினும் ஆம்.

247. முகில் – மேகம்.

248. பொருட்பா - தேவார திருவாசகங்கள். பூவை - நாகணவாய்ப்புள்.

249. பாழி மதன் – வலிய மன்மதன். குயில் மன்மதன் சின்னமாகிய எக்காளம் என்றல் மரபு.

சின்னமா யெங்குந் திரிந்துகூ வுங்குயிலம்
முன்னவன்பாற் சேறன் முடியாதே - மன்னும் 250

அரவா பரணமென்பா ரம்மொழிகேட் டங்கு
விரவாதே தென்றல் விடுத்தால் - உரவாரும் 251

உன்னைப்போல் வேறுதுணை யுண்டோ குரவர்பிரான்
றன்னைப்போல் வேறொருவர் தாமுளரோ - அன்னை 252

யனைய குரவர்பிரா னன்ற மரபு
நினைய வகுத்துரைப்ப னீகேள் - புனையவரு 253

காமர் கயிலையிற்சீ கண்ட வுருத்திரன்பால்
ஏமவருள் பெற்றநந்தி யெம்பெருமான் - தோமில் 254

வழியே வருசனற்கு மார முனிவர்
பழியேது மில்லாத பண்பிற் - கொழியருள்சால் 255

சத்திய ஞான தரிசனிகள் யாவோருந்
துத்தியஞ் செய்பரஞ் சோதியார் - நித்தியமார் 256

மெய்கண்ட தேவர் விளங்குமரு ணந்தியார்
பொய்கண்ட யாரும் புணரருஞ்சீர் - மொய்கடந் 257

தைவாழ் மறைஞான சம்பந்தர் தாளின்மதி
கைவா ழுமாபதியார் காட்சிமிகு - செய்ய 258

அருணமச்சி வாய ரமைசித்த ராய
கருளில் சிவப்பிர காசர் - தெருள்செய் 259

---

251. வாதாசனமாகிய பாம்பின்முன் தென்றல் செல்லாது; பாம்பு காற்றையே உணவாகவுடையது.

252. குரவர்பிரான் தன்னைப்போல் வேறொருவர் தாமுளரோ— ''இருவினை தாமிவை மும்மல மீங்கிவை ஈதுசிவம், கருவுறு மாருயி ருண்மை யிதுவென்று காட்டவல்ல, குருபரன் நீயன்றி வேறறியேன்'' என ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் பஞ்சாக்கரதேசிகர் மாலையில் அருளிச்செய்தமை காண்க.

253. அன்னை அனைய குரவர்பிரான் - 'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே', 'பால்நினைந் தூட்டும் தாயினும்' என்பன காண்க.

254. இதுமுதல் 256 வரை அகச்சந்தான குரவர்கள்.

256. துத்தியம் செய் - தோத்திரம் செய்யும்.

257. அரும் சீர் மொய் – அரிய சிறப்புக்கள் நெருங்கும். 257–258 புறச்சந்தானகுரவர்.

குருநமச்சி வாயர் குலவுமறை ஞானர்
திருவம் பலவாண தேவர் - மருவும் 260

உருத்திர கோடியா ரொப்பில்வே லப்பர்
திருத்தி யினிதருளச் செய்து - பொருத்தும் 261

இருகுமர சாமிகண்மா சில்லா மணியார்
அருமை யிராமலிங்க ரன்பார் - பெருமையிரு 262

வேலப்ப ரென்று மிளிர்திருச்சிற் றம்பலவர்
பாலக்க ணில்லம் பலவாணர் - சால 263

அருள்சுப் பிரமணிய ரம்பல வாணர்
தெருள்சுப் பிரமணிய தேவர் - பொருள்சால் 264

மரபு நிலையிதுவால் வார்த்தைநீ பேசப்
பரவு சமயம் பகர்வேன் - விரவுநெஞ்சே 265

---

260. பிரதம பரமாசாரியராகிய பஞ்சாக்கர தேசிக மூர்த்தி. அம்பலவாணர் மூன்றாவது பட்டம்: பண்டாரசாத்திரம் பதினான்கில் பத்துநூல் அருளியவர்கள்.

261. 5-வது குருமூர்த்திகள்: இவர்கள் மெய்கண்ட நூல்கள் பல வற்றிற்கு உரையருளியவர்கள்.

262. மாசிலாமணி தேசிகர் எட்டாவது குருமூர்த்திகள். திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ் அருளிச்செய்தவர்கள். இவர்கள் மாணவர் இலக்கணக்கொத்து ஸ்ரீ சாமிநாததேசிகர்.

263. இரு வேலப்பர்: 10. வேலப்பதேசிகர், 11. பின் வேலப்ப தேசிகர். பேரூர் ஸ்ரீ வேலப்ப தேசிகரிடத்திலே ஸ்ரீ சிவஞானசுவாமிகள் உபதேசம் பெற்றனர். திருச்சிற்றம்பல தேசிகர் ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளின் மாணவருள் ஒருவர்; அரும்பாக்கம்; 12-வது பட்டத்தில் விளங்கியவர்கள். பாலக்கண் - நெற்றிக்கண். இல் - இல்லாத.

264. சால அருள் சுப்பிரமணியர்: 14-வது பட்டம் வேளூர் சுப்பிரமணிய தேசிகர்: 80 திருநட்சத்திரப் பண்டாரச்சந்நிதிகள். 55 ஆண்டுகள் பட்டத்தில் வீற்றிருந்தருளினர். முதன்முதலாக இந்நூலா சிரியராகிய பிள்ளையவர்கள் இக்குருமகாசந்நிதானத்தைத் தரிசித்துத் திரு வருள் பெற்றனர். 15. அம்பலவாணதேசிகர் காலத்திலேதான் ஆதீன வித்துவானாகவும் மகாவித்துவானாகவும் இருந்து புகழ்பெற்றார் இவ் வாசிரியர். தெருள் சுப்பிரமணிய தேவரே பாட்டுடைத்தலைவர்; இவர்க ளாலேயே பிள்ளையவர்கள் திருவாவடுதுறையில் இருந்து விளங்கினர்.

265. பரவு சமயம் - தரிசித்துத் தோத்திரம் செய்யும் காலம். பொருள் சால் மரபு நிலை - 'சற்குரு சந்ததியென்பது பலவாற்றானும் எல்லார்க்கும் இனிது விளங்குவதற்குரிய பெருந்தகைமையுடைய மரபு' என்க.

பூதநான் கின்பம் புரிகுழலார் போகமெனுங்
கோதவுல காயதரைக் கூடாதே - ஏதமிகு 266

கந்தமைந்துங் கெட்டாற் கனமுத்தி யென்றுழலும்
பந்தப் பவுத்தர்முகம் பாராதே - முந்தத் 267

தலைபறித்துப் பாயுடுத்தித் தாந்தவமே பேசிக்
கொலைசெ யமணரைக்கூ டாதே - அலைபுரியுங் 268

கள்ளைக் குடித்துக் களித்துழலும் வாமமதக்
கொள்ளைச் செருக்கருரை கொள்ளாதே - தள்ளாக் 269

கருமமன்றி வேறு கருத்தனிலை யென்று
தெருமருவார் கூட்டஞ்சே ராதே - பொருவினெஞ்சே 270

நின்னையணு வென்று நியாயம் புகன்றுழல்வான்
தன்னை யொருஞான்றுஞ் சாராதே - சொன்ன 271

---

266. பூதங்கள் நான்கே, புரிகுழலார் போகமே இன்பம் என்பார் உலோகாயதர். கோத - குற்றமுடைய.

267. கந்தம் ஐந்து - உருவக் கந்தம், வேதனைக்கந்தம், குறிப்புக் கந்தம், பாவனைக்கந்தம், விஞ்ஞானக்கந்தம் என்பன; சிவஞான சித்தியார் - பரபக்கம் - சௌத்திராந்திகன் மதம் காண்க.

268. ''பண்ணிய சாத்திரப் பேய்கள் பறிதலைக்குண்டர்'' அப்பர் தேவாரம். ''இகழுரு வொடுபறி தலைகொடு மிழிதொழில் மலிசமண் விரகினர்'' சம்பந்தர் - தேவா. அலை புரியும் - அலைத்தலைச் செய்யும்.

269. வாமமதம் - சத்தி வழிபாடுசெய்வோர் வாம மார்க்கம் சமய மார்க்கம் என்னும் இருவேறு கொள்கையர். வாம மார்க்கத்தார் கள் முதலியன அருந்திக் களிப்பர்:

270. தள்ளாக் கருமம் - நீங்காத கன்மங்கள். கன்மமே பயனைத் தரும், அதற்கொரு முதல்வன் வேண்டா என்பார் மீமாஞ்சகர். தாருக வன முனிவர்கள் இத்தகையோரே. ''செய்வினையும் செய்வானும் அதன் பயனும் சேர்ப்பானும், மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே, இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென, உய் வகையால் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்தார்'' எனச் சேக்கிழார்சுவாமிகள் சாக்கியநாயனர் புராணத்து அருளிச்செய்தமை காண்க. தெருமருவார் - மனச்சுழற்சியையுடைய மீமாஞ்சகர். கருத்தன் இலை.

271. பரமான்மா சீவான்மாக்களுக்கு வேருய்ப் பலவாய் நித்தமாய் அணுவாய் ஞானத்துக்கு ஏதுவாய் ஆன்மாக்கள்தோறும் வெவ்வேருய் இருப்பது மனம் என்றும் கூறுபவர் வைசேடிகர், நியாயநூலார். ஒரு ஞான்றும் - ஒருபொழுதும்.

பகவனுக் குண்டு பரிணும மென்னுந்
தகவிலைந்தி ராவினர்ச்சா ராதே - இகவரிய 272

முத்திநிலை யான்மா முதல்வனே டொக்குமெனும்
புத்தி படைத்தவர்பாற் போகாதே - மெத்துமொளிப் 273

பாலவிழி யாற்குப் பரிணுமஞ் சொற்றுழலும்
மாலமைந்தார் கூட்ட மருவாதே - ஞாலமிசைத் 274

தாம்பிரம மாகாமை தஞ்செயலி னுலுணரார்
நாம்பிரம மென்பாரை நாடாதே - ஓம்பு 275

திருவா வடுதுறையைச் சேர்ந்து வளங்கள்
ஒருவாத் திருவீதி யுற்றுப் - பொருவாத 276

தென்முகப்பின் வாயில்வழிச் சென்றுகொலு மண்டபத்தின்
பொன்முகப்பி னுள்ளே புகலுற்று - நன்முகத்திற் 277

சாத்திரங்க ளோதித் தனியமர்வார் சிந்திப்பார்
ஏத்திரங்கும் வண்ண மெடுத்திசைப்பார் - பாத்துச் 278

சடைகாய வைத்துத் தனியமர்வா ரன்னேர்
புடையாரை யும்வணங்கிப் போற்றி - விடையா 279

நலமா ரதிகார நாடுதிருச் சிற்றம்
பலமா முனியைப் பணிந்து - பலமியாவுஞ் 280

---

272. பகவன் - விஷ்ணுமூர்த்தி. பரிணுமம் - பரம புருஷனுகிய திருமால் பிரபஞ்சசிருஷ்டிகாலத்தில் மாயா சொரூபியுமாய், தன்வழி மயக்கும் ஆன்மாக்களுமாய், அவ்வான்மாக்களைப் பந்திக்கும் தத்துவக் கூட்டங்களும் தானேயாய் நிலைபெற்று, அம்மாயையாலே ஆன்மாக்களைப் பந்தித்து மீளவும் நீக்குவன் என்பது. எனவே, மாயை முதல்வனின் வேறுபொருளன்று என்பர். தகவு இல் ஐந்து இராவினர்; பாஞ்ச ராத்திரிகள். இகவு அரிய - நீங்குதல் இல்லாத.

273. முதல்வனேடு ஒக்கும் எனும் புத்தி படைத்தவர் சிவசம வாதிகள்; சிவபெருமானைப்போலவே, முத்திநிலையில் ஆன்மாக்கள் ஐந் தொழிலியற்றும் என்பர் அவர்.

274. பால விழியாற்கு - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானுக்கு. பரிணுமம் சொற்றுழல்வார் நிமித்தகாரண பரிணுமவாதிகள்.

275. நாம் பிரமம் என்பார் ஏகான்ம வாதிகள்.

276. வளங்கள் ஒருவா - வளப்பங்கள் நீங்காத. இதுமுதல் சென்று திருவாவடுதுறையைச் சேர்ந்து பாட்டுடைத்தலைவராகிய குருமூர்த்திகளைத் தரிசிக்கும்படி கூறப்படும்.

278. பாத்து - பகுத்து.

280. விடை ஆம் நலம் ஆர் அதிகாரம். திருச்சிற்றம்பல முனிவர் அக்காலத்துத் தலங் காறுபாருக இருந்தவர்.

சேர்தரவுள் ளாற்போய்த் திருமாளி கைத்தேவர்
வார்கழல் போற்றி வணங்கியே - ஒருங் 281

குரவர்பிரான் மூல குருநமச்சி வாயன்
பரவுகழல் போற்றிப் பணிந்து - விரவும் 282

இரண்டா மொடுக்க மெனப்புகல்பொற் கோயில்
அரண்டா னெனவமரு வானைத் - திரண்ட 283

கலைஞான வாழ்வைக் கருதுவார் பேற்றைத்
தொலையாப் புலவர்குழாஞ் சூழ - உலையா 284

வினுவிடை பேசி வியப்புற் றமரும்
அனுதியுரு வாய வமுதை - இனுதகுணம் 285

எல்லாரு நீங்க வினிதுபோ தித்தமரு
நல்லா தரவு நயப்பானைச் - சொல்லும் 286

ஒருநமச்சி வாயனென வோதப் பொலிந்து
வருநமச்சி வாயனடி வாழ்த்திப் - பொருவாக் 287

குருசாமி கோயில்வலங் கொண்டுபடி யேறிக்
குருசாமி பூசைமுனங் கூடி - உருகாமெய் 288

அன்பின் வணங்கி யடியா ரமுதுகொள
வன்பி னமர்கோயில் வந்தித்தே - இன்ப 289

விதமார் முதலொடுக்க மென்றிசைபொற் கோயிற்
புதவொர்பான் மெல்லப் புகுந்து - கதமோவி 290

ஆங்குநிற்பார் தம்மை யடுத்துச் சமயம்வினுய்ப்
பாங்குபெற வுள்ளாற் பயப்புகுந்து - தேங்குதிரு 291

---

282. ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியர்.

283. அரண் தான் என.

285. இனுத குணம் – துன்புக்கு ஏதுவான குணம்.

287. சின்னப்பட்டத்தில் வீற்றிருந்த நமச்சிவாயதேசிகர்.

288. குருசாமிகோயில் – ஸ்ரீ நமச்சிவாயமூர்த்திகள் திருக்கோயில்.

290. என்று இசை - என்று சொல்லப்படும். புதவு - கதவு. கதம் ஒவி – கோபம் நீங்கப்பெற்று; எனவே சாந்தகுணமுடைமையாம்.

291. சமயம் – தரிசித்தற்குரிய காலம். பயப்புகுந்து: பைய – மெல்ல.

முன்னஞ்சே வித்து முனிவர்முத லோர்போற்ற
நன்னர்நீ றள்ளியள்ளி நல்கியமர் - அன்ன 292

பொழுதுரையா தேபல் புலவர்கவி பாடும்
பொழுது முரையாதே போற்றி - எழுதுமடல் 293

வாசித்து நிற்பாரை மானிக்கு மப்பொழுது
நேசிக்குந் தன்மை நிறைந்தாராய்ப் - பூசிக்குந் 294

தொண்ட ருவக்கச் சுருதிப் பொருள்புகறல்
கொண்ட சமயத்துங் கூறுதே - மண்டவரு 295

மன்னர் முதலோர் வணங்க வவர்க்குவப்பு
நன்னரியற் றும்பொழுது நாடாதே - சொன்ன 296

மறையோர் பலரிரக்கும் வார்த்தைசெவி யேற்றுக்
குறைதவிர்க்கும் போதினுங்கூ றுதே - மறைசொல் 297

சிதம்பரமுன் னுய திருக்கோயிற் கெல்லாம்
பதம்பரவு நித்தியமுற் பண்பின் - இதம்பரவ 298

நன்றுவிசா ரித்து நயவாக் குறைதவிர்த்துத்
துன்று பொழுதுமிதைச் சொல்லாதே - சென்று 299

பணிசிறு ரைக்கற்கும் பாடம் வினுவத்
துணியுங்கா லத்துஞ்சொல் லாதே - அணிதருமா 300

னந்தக் களிப்பா னகச்சிலர்வந் தேத்தெடுக்கும்
அந்தப் பொழுது மறையாதே - சந்த 301

உவளகத்து மேவு மொருசமய நோக்கித்
திவளநெஞ்சே நீகூடச் சென்று - தவளப் 302

பொடியணியு மேனியெங்கள் பூரணன்பொற் றுளிற்
படிமிசை வீழ்ந்து பணிந்து - நெடியகுணக் 303

குன்றே! மெய்ஞ்ஞானக் கொழுந்தே! அருட்கடலே!
நன்றே யுயிர்க்கருளு நாயகமே! - அன்றே 304

---

292. தரிசித்தபின் விண்ணப்பம் செய்யும்முறை கூறப்படும்.

293. எழுது மடல் வாசித்து நிற்பார் - இராயசவேலே பார்ப்பார். எழுதுமடல்: வினைத்தொகை. மானிக்கும் அப்பொழுதும் - அபிமானம் பண்ணும் அக்காலத்திலேயும்.

297. மறையோர் – பிராமணர்கள்.

301. நக - சிரிக்கும்படி.

302. உவளகம் - திருப்பள்ளியறை. தவளப்பொடி - திருவெண்ணீறு.

304. அன்றே அடுத்த - உயிருள்ளபோதே பொருந்திய.

யடுத்தமல பந்த மகற்றவுருக் கொண்டு
மடுத்த பெருங்கருணை வாழ்வே! - படுத்தமைந்த 305

மைம்மாறு சிந்தை வயங்கு மடியார்பாற்
கைம்மாறு வேண்டாத கற்பகமே! - பொய்ம்மாறெம் 306

பேறே! ஆனந்தப் பெருக்கே! ஞானக்கருப்பஞ்
சாறே! மெய்யன்பர் தவப்பயனே! - நாறுமருட் 307

சிந்தா மணியே! செழுங்காம் தேனுவே!
சந்தாபந் தீர்க்குந் தனிச்சுடரே! - நந்தா 308

வரமணியே! கோமுத்தி வாழ்வே! அருட்சுப்
பிரமணிய தேசிகப்பெம் மானே! - பரவு 309

குருநமச்சி வாய! என்று கொண்டாடி யேத்திப்
பெருகருளுண் டாகநனி பேசி - ஒருவரிய 310

பாலை யுணர்த்திப் பசியநறுஞ் செங்கழுநீர்
மாலை கொடுவிரைந்து வா. 311

ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது முற்றிற்று.

---

306. மை மாறு சிந்தை - மயக்கந்தீர்ந்த மனம். கைம்மாறு - பிரதியுபகாரம்,

308. சந்தாபம் - துன்பம்; ஈண்டுப் பிறவித்துன்பம்.

310. ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகரின் வேறல்லர் என்பது. இதனை ஸ்ரீ முகங்களில் கைச்சாத்திடுதலால் நன்கறியலாம்.

311. ஒருவ அரிய பாலை - நீங்குதற்கருமையான பிரிவினை. செங்கழுநீர் மாலை என்றது, குருமணி அணிந்து விளங்கும் பூமாலையை.

# தனிப்பாடல்கள்

### நேரிசைவெண்பா

கண்ணுன் மதனைக் கடிந்ததற்கேற் பப்புரப்பாற்
பெண்ணு ளுருச்சுப் பிரமணிய - அண்ணுல்
திருவா வடுதுறையாய் சிற்றடியே னின்ப
மருவா வடுமாற வை. 1

### விருத்தம்

மாமேவு புகழ்த்திருவா வடுதுறைச்சுப்
பிரமணிய வள்ள லாய
தூமேவு குரவன்பேர் சொற்றவுடன்
என்பிறப்புத் தொலைந்த தம்மா
பாமேவு மிதுகண்டும் பிறப்பொழிப்பான்
இவனென்று பலருஞ் சொல்வார்
தேமேவு நலந்தெரியென் வாயினையே
புகழாத செய்கை யென்னே. 2

உரவுபொலி மறைமுடியாஞ் சிவக்கொழுந்தைப்
பரானந்தத் துவாவை நாளுங்
கரவுதவி ரன்பருளத் தகலாமல்
அமுதூற்றுங் கருணை வாழ்வைப்
புரவுமலி மெய்ஞ்ஞான வாரிதியைத்
துறவரசைப் பொருவி லாத
பரவுபுகழ்த் துறைசையிற்சுப் பிரமணிய
குருமணியைப் பரவி வாழ்வாம். 3

செல்லார்க்கும் பெருமுழக்க மண்முழக்கம்
எனமேற்போய்த் திகழ்மா டத்தால்
சொல்லார்க்கும் கழனிகளாற் றெலையாத
வளங்காட்டும் துறைசை மேவிக்
கல்லார்க்கும் அல்லார்க்குங் வல்லார்க்கும்
வல்லார்க்குங் கணக்கி லாமற்
றெல்லார்க்கும் எய்ப்பில்வைப்பாஞ் சுப்பிரம
ணியகுரவன் இருதாள் போற்றி. 4

தேடுகயி லாயபரம் பரைத்துறைசை
மேயநமச் சிவாயன் றன்னைக்
கூடுதன்முன் னுள்ளபதி ஞல்வருமுற்
ரேன்றலெனக் கொண்டா ரவ்வா
றூடுதவிர் தரக்கொண்டும் பிற்ரேன்ற
லெனவுங்கொண் டுவக்குங் கோமான்
நீடுபெரும் புகழமைசுப் பிரமணிய
குருமணியை நினைந்து வாழ்வாம். 5

ஒப்புயர்வில் லவன்சிவன்மூன் றும்முடைமை
யாலிரண்டும் ஒன்றும் ஏற்ருர்
தப்பறத்தாழ்ந் தவரெனல்தேர்ந் தனந்திருவா
வடுதுறைநற் றலத்துள் வார்தம்
வைப்பனைய சுப்பிரம ணியகுரவன்
றன்பெயரை வகித்து ளாரை
எப்படியும் விலக்கலின்மற் றிவன்மூன்றும்
இலனென்றே யியம்பு வோமே. 6

திருமணியை நிறத்தமைத்த நீன்மணிமெய்ம்
மால்பிரமன் தேடிக் காணு
அருமணியென் னையும்பொருளா வாண்டசிந்தா
மணியன்பர் அகத்தே மேய
ஒருமணியம் பலவாண சிரோமணிகண்
மணியடிமை யுவந்தார் கண்ணுட்
கருமணிவண் டுறைசையிற்சுப் பிரமணிய
குருமணியைக் கருத்துள் வைப்பாம். 7

## வஞ்சித்துறை

ஒப்பருந் துறைசைச், சுப்பிர மணிய
அற்புத குரவன், நற்பதந் துணையே. 8